உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-18
மன்மத - மாசி-4
16-2-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## நெய்தல்

மணம் புரிந்துகொள்ளாது தலைவன் நீட்டிப்ப அதுபொருத தலைவிக்குத் தோழி ஆற்றும் வண்ணம் சொல்லியது.

உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுத, லரவுவாள் வாய முன்னிலைத் தாழை, பொன்னேர் தாதிற் புன்னையொடு கமழும், பல்பூங் கானற் பகற்குறி வந்துநம்,மெய்கவின் சிதையப் பெயர்ந்தன னாயினுங், குன்றிற் றோன்றுங் குவவுமண லேறிக், கண்டனம் வருகஞ் சென்மோ தோழி, தண்டா ரகலம் வண்டிமிர் பூதப், படுமணிக் கலிமா கடைஇ, நெடுநீர்ச் சேர்ப்பன் வரூஉ மாறே. 235

தோழீ! வலிய அலை மோதிய சருச்சரையுள்ள வளைந்த அடியையுடைய வாளரம் போன்ற வாயினவாகிய முட்கள் பொருந்திய இலைமிக்க தாழைப்பூ, பொன்போன்ற மகரந்தத்தையுடைய புன்னைப் பூவோடு கமழுகின்ற பலபூக்களையுடைய சோலையில் பகற்குறி வந்து நமது மேனி அழகு கெடும்படி பெயர்ந்து சென்றானாயினும், குளிர்ந்த மாலையணிந்த மார்பிலே வண்டுகள் ஒலிக்கின்ற மணியணிந்த குதிரைகளைச் செலுத்தி நெடிய நீரையுடைய நெய்தனிலத் தலைவனாகிய நமது காதலன் வருவதனைக் குன்றுபோலத் தோன்றும் குவிமணல் மேட்டில் ஏறிக் கண்டுவரச் செல்லுவோமா?

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

கரும்பமர் வில்லியைக் காய்ந்துகாதற் காரிகை மாட்டருளி
யரும்பமர் கொங்கை யோர்பான்மகிழ்ந்த வற்புதஞ் செப்பரிதாற்
பெரும்பக லேவந்தென் பெண்மைகொண்டு பேர்த்தவர் சேர்ந்தவிடஞ்
சுரும்பமர் சோலைகள் சூழ்ந்தசெம்மைத் தோணி புரந்தானே

:-திருஞானசம்பந்தசுவாமிகள்

உரை:- 'கரும்பு அமர் - கரும்பால் ஆகிய, வில்லியை-வில்லை உடையவனுகிய மன்மதனை, காய்ந்து-கோபித்து உருவத்தை அழித்து, காதல்-அவனது காதலுக்குரிய, காரிகை மாட்டு-இரதி தேவியின் பொருட்டாக, அருளி-அவளுக்குமட்டும்அவன் உருவம் தெரியும்படி அருள் செய்து, அரும்பு அமர் கொங்கை - கோங்கரும்பை யொத்த கொங்கையையுடைய உமாதேவியை, ஓர்பால்மகிழ்ந்த- ஒருபாகத்திலே வைத்து மகிழ்ந்த, அற்புதம் - அதிசயம், செப்பரிது-சொல்ல முடியாததாகும், பெரும் பகலே வந்து-நல்ல பகற்பொழுதிலே வந்து, என் பெண்மை கொண்டு-எனது பெண் தன்மையைக் கவர்ந்து கொண்டு, போர்த்தவர் - நீங்கியவர், சேர்ந்த இடம்-போய்த் தங்கிய இடம், சுரும்பு அமர்-வண்டுகள் ஒலிக்கின்ற, சோலைகள் சூழ்ந்த-பூம்பொழில்கள் சூழ்ந்துள்ள, செம்மை-அறம்சான்ற, தோணிபுரம் - தோணிபுரமாம்' என்பதாகும்.

ஆளுடைய பிள்ளையாரது திருவாக்குகளில் அகப்பொருட்டுறையமைந்த பாடல்கள் பலவும், பதிகங்கள் சிலவும் உள்ளன. முதல்மூன்று திருமுறைகளாக இப்பொழுது கிடைத்துள்ள முந்நூற்றெண்பத்தைந்து திருப்பதிகங்களுள் ஏறக்குறையப் பதினறு திருப்பதிகங்கள் அகத்துறைப் பொருளை உடையனவாயிருக்

கின்றன. அவற்றுள் மூன்றாந் திருமுறையில் உள்ள பதிகங்கள் ஆறு ஆகும்.

அவ்வாறு பதிகங்களுள் திருத்தோணிபுரத்திற்குரிய மேற்கண்ட முதற்பாடலையுடைய பதிகமும் ஒன்று. இப்பதிகத்தில் திருக்கடைக்காப்பு உள்பட ஏழுபாடல்களே உள்ளன. 4, 5, 6, 7 என்னும் எண்ணுடைய பாடல்கள் மறைந்துவிட்டன என்று கருதப்பெறுகிறது. இப்பதிகத்திலுள்ளபாடல்களில், தோணிபுரேசன்பால் உள்ளத்தைக்கொள்ளை கொடுத்த தலைவி, தனது பெண்மையையும் சாயலையும், உள்ளத்தையும், சிந்தையையும், எழிலையும்அவன் கவர்ந்து கொண்ட திறத்தை அழகுபொருந்தக் கூறுகின்றாள்.

ஆண்டவனைத் தலைவனாக-தந்தையாக-தோழனாக - காதலனாக எண்ணி அன்புசெய்வது சைவ மரபு. ஆண்டானடிமைத் திறத்தில் அரும்புகின்ற வழிபாட்டு நெறி, காதலன்காதலித் திறத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும். இறைவனும் உயிரும் நாயக நாயகி பாவத்தில் இன்புறுகின்ற நிலையே முடிந்தமுடிபாயுள்ளது. இதையே ஞானநெறி யென்றும் சன்மார்க்கமென்றும் சாத்திரங்களிற் பேசுவார்கள்.

காட்சிக்கு வாராத பொருளைப் புலப்படுத்தற்கு அதனோடு ஒரு சார் ஒற்றுமையுடைய காட்சிப் பொருளை முன்னிலைப் படுத்திக் காட்டுவது மரபு. நரியை அறியாதவனுக்கு அதன் இனமாகிய நாயை எடுத்துக்காட்டுவார்கள்: நாயைக் கூறுவதால் அதையே முழுதும் ஒத்தது நரி என்று யாரும் நினைக்கமாட்டார்கள். உலகியலின்பங்களுள் உயர்ந்தது காதலின்பம். அதனை நுகர்ந்து மகிழுகின்ற மக்களுக்கு அதை முன்னிலைப்படுத்திப் பேரின்பத்தின் உயர்வை அறிவுறுத்தினர் ஆன்றோர். அதனால் சிற்றின்பத்தை ஒத்ததே பேரின்பமும் என்று கருத இடமில்லை.ஆனால் பேரின்பத்தை அறிந்துகொள்ளுதற்குச் சிற்றின்பம் கருவியாயிருக்கும்.

'பெற்றசிற் றின்பமே பேரின்ப மாயங்கே முற்ற வரும்பரி சுந்தீபற, முளையாது மாயையென் றுந்தீபற' என்பது திருவுந்தியார். இதனால் மாயை முளைப்பதற்குக் காரணமாயிருப்பது சிற்றின்பமென்பதும், அது கெடுவதற்குக் காரணமாயிருப்பது பேரின்பமென்பதும் அறியக்

கிடக்கின்றன. இன்னும் 'பேரின்ப மான பிரமக் கிழத்தி' யென்றும் இது பாராட்டப் பெறும்.

சிற்றின்பம் பேரின்பமாக மாறும் இடமே உலகியற்காதல் இறையியற்காதலாக நிறைவு பெறுகிற இடமாகும். இந்த இடத்தில் நின்றே அருளாளர்கள் அகத்துறைப் பாடல்களைப் பாடியருளினார்கள். 'ஒருவருடலில் ஒருவரொதுங்கி, இருவரெனுந் தோற்ற மின்றி' என்பது உலகியலில் தலைவன் தலைவியர் கூட்டு. ஒருவருயிரி ரொருவர் கலந்து இருவரெனுந் தோற்ற மின்றி' என்பது இறையியற் கலப்பு. இதனையே அத்துவிதமென்று சொல்லுவர். 'உயிர் கலந்தான்' என்பது திருவாசகம்.

உயிர் இறைவனைக் கலந்து இன்புறும் நிகழ்ச்சிகளை அகப் பொருட்சுவை பொருந்த ஆளுடையபிள்ளையார் வழங்கியுள்ளார். அவர் பாடிய முதற்பதிகத்திலேயே அகப்பொருள் மணம் கமழ்ந்துகொண்டிருக்கின்றது. 'ஏர் பரந்தவினவெள் வளை சோரவென் னுள்ளங்கவர் கள்வன்' என்பது அப்பதிகத் தின் மூன்றும் பாடற் பகுதி. மூன்றாண்டுப் பருவமுடைய ஆண்குழந்தை இவ்வாறு பாடுவதன் உள்ளுறையைச் சிந்தித்தல் வேண்டும். உருத்தெரியாக் காலத்தே உள் புகுந்து உளம் மன்னிய இறைவனது கலப்பும். அக்கலப்பால் உண்டாகிய இன்பமும் இவ்வாறு நாயக நாயகி பருவத்தில் உணர்த்தப்பெற்றன.

ஞானப் பசியெடுத்து அழுத குழந்தைக்கு நாயகன் நல்கிய பரஞான உணர்வு, பக்குவ முதிர்ச்சியை விளைவித்தது. 'தந்ததெய்வந்தருமெனச் சேறல்' என்பது அகப்பொருள்துறைகளில் ஒன்று. இன்பம் நுகர்ந்த பிள்ளையாராகிய தலைவி, மேலும் பல இடங்களில் அவ்வின்பப் பேற்றை அவாவிநிற்பது இயல்பு தானே! எனவே, தன்னை மறந்து தன்னாமம் கெடும்படி செய்த தோணிபுரேசனது இயல்பை இப்பதிகத்திலும் கூறுகிறார்.

சிவபெருமானது பேராற்றலைப் புலப்படுத்துகின்ற செயல்கள் பலவற்றுள், அவன் காமனை யெரித்ததும் ஒன்று. உலகத்திலுள்ள எல்லாவுயிர்களுக்கும் சிற்றின்ப வுணர்ச்சியை உண்டாக்கி அவற்றைக் கூட்டி வைக்கின்றவன் மன்மதன். அவ

னது ஆற்றல் ஆண்டவனிடத்தில் அடிப்பட்டுவிட்டது. போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதலும், யோகியாய் யோகமுத்தி உதவுதலும் இறைவன் தனது சங்கற்பத்தால் செய்வனவேயன்றிப் பிறர் மனவிருப்பத்திற்குட்பட்டுச்செய்வனவல்ல

இப் பேருண்மையைக் காமதேவனாகிய வில்லியைக் காய்ந்தும், மாதொரு கூறனாக இறைவன் மன்னுகின்றானென்று சொல்லிப் புலப்படுத்தினார் ஆசிரியர். மறக் கருணையால் காய்கின்ற பெருமான், அறக்கருணையால் அருளுகின்றபண்பும்உடையவன். மன்மதனை உருவழித்த வள்ளல், அவன் மனைவியின் வேண்டுகோளையேற்று, அவனுக்கு மட்டும் அவனுருவந் தெரிய அருள் செய்தானென்பதை 'காதற் காரிகை மாட்டருளி' என்ற சொற்றொடரால் அறிகின்றோம்.

உமையம்மையைப் பிரிந்து யோகிருந்த பொழுது, போகவுணர்ச்சியை உண்டாக்குதற்குக் காமன் முயன்றான். அதன் பயனாக, அவன் உருவழியப்பெற்றான் ஆனால் அவனையின்றியே அம்மையை ஒருபால் வைத்ததுமின்றி அவளோடு மகிழ்ந்து கொண்டும் இருக்கின்றான் ஆண்டவனென்றால், அது அற்புதமானதும் செப்பரிதானதுமல்லவா?

மற்றைக் கள்வரெல்லாம் இராப்பொழுதில் வந்து பெயரும் பொருளைக்கொள்வர். இத் தோணிபுரக்கள்வரோ; நண்பகலில் வந்து,பெயராத பெண்மையைக்கொண்டார்.களவுசெய்தார் தாமிருக்குமிடத்தைப் பிறரறியாதபடி மறைந்திருப்பர். மறைந்த இடமும் நேர்மையுள்ள இடமாயிராது. இங்குக் கூறப்பெற்ற கள்வர், தாமிருக்குமிடம் பிறரறியவும், அதுஅறஞ்சான்றதாயிருக்கவும் வைத்துக் கொண்டார்.

செம்மைதோணிபுரமென்பதில் தலச்சிறப்புஉணர்த்தப்பெற்றது. செம்மை என்பது நேர்மையைக் குறித்து அந்நேர்மையாகிய அறத்தையுடைய மக்களின் வாழ்வையுடையது அந்நகரமென்பதைப் புலப்படுத்திய து. செம்மை என்பது சிவமென்னும் பொருளையுந் தந்து, அத்தலத்தின் அருள் வளத்தையும் உணர்த்திக்கொண்டிருக்கிறதென்பது அறியத்தக்கதாகும்.

அரும்பமர் கொங்கையை ஓர்பால் மகிழ்ந்த அண்ணல் பிறிதொருத்தியின் பெண்மையையும் கவர்ந்துசென்றது, பொருந்தாதென்னுங்குறிப்புங் காணப்பெற்று இப்பாடல் சுவையளித்துக்கொண்டிருக்கின்றதல்லவா?

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

சம்ஸ்கிருதத்துக்குரியா ரென ஒரு கூட்டத்தாருக்குப் பட்டங் கட்டித் தமிழருக்கு அவர் அயலார், பகைவர் எனக் காட்டித் தமிழரை அவர் மேற் பாய்ச்ச வேண்டுமென்பதே அப்பிளவை முயற்சியின் நோக்கம். அதுகை கூடினால் தமிழரனைவரின் ஆதரவுந் தமக்குக்கிடைக்கும். அதுகொண்டு தமிழர்ச்சனையை எளிதிற் புகுத்திவிடலாம் எனஅவர் நம்புகிருர். அந்நம்பிக்கை நிறைவேறினுலும் அதற்காக அவர் ஆசரிக்கும் அப்பிளவைவழி நேரிதன்றென்பது மாத்திரம் உறுதி.

12. 'தமிழ்மொழி,வடமொழி அவ்வளவு முக்கியமல்ல. சைவம் தேய்[த் துக்கொண்டிருக்கிறது. ---சைவசமயம் காப்பாற்றப்பட வேண்டும். கோவில்களுக்குப் பக்தர்கள் தேவை. ....அமெரிக்காவிலிருந்து மிஷனரிகள் இங்கு வருகிருர்கள்...' (16-6-55 தமிழ் நாடு), 'தினம் 200 குழந்தைகள் மதம் மாற்றப்படுகின்றனர்' (13-8-55 தமிழ் நாடு), 'தமிழில் அர்ச்சனை செய்யவேண்டுமென்று நான் சொல்வது...பக்தியை வளர்ப்பதற்கே' (15-6-55 தினத்தந்தி) என்கிருர் நவீனர். இருமொழியையும் விடச் சைவம் முக்கியமென்ருர், அதை அவர் உளமாரச் சொல்லவில்லை. என்னை? 'எங்களுக்கு வடமொழியின் மீதுள்ள பற்றுக் குறைந்துவிடவில்லை. அதற்கு நாங்கள் என்றும் மதிப்புக்கொடுக்கத்தான் செய்கின்றோம்' (8-7-55 தமிழ்நாடு), 'எனக்கு சம்ஸ்கிருதத்தில் வெறுப்பு கிடையாது. அதன் பேரில்தான்எனக்கு பக்தி...வடமொழியில் அர்ச்சனை செய்யக்கூடாதுஎன்று யாராவதுசொன்னால் நான் அதைஎதிர்ப்பேன்' (15-6-55 தினத்தந்தி) என்கிருரவர். அவருக்குச் சம்ஸ்கிருதத் தோடு தக்கதொரு தொடர்பு வேண்டும். அப்போதுதான் அம்மொழியிற் பற்றும், மதிப்பும், பக்தியும் மொழியர்ச்சனையை எதிர்ப்பவரை எதிர்க்கும் ஆர்வமும் அவருக்கு இருக்கும். அத்தொடர்பு யாது? அ...

தின்னதென அவர்காட்டவில்லை. அன்றியும் (தமிழர்ச்சனையைச்) சிலர் கட்டாயமாகச் செய்யும்படி செய்தல்வேண்டுமென்று கூறுகின்றார்கள்....வழிபாட்டில் கட்டாயம் என்பது கூடாத ஒன்றாகும். தமிழில்தான் அர்ச்சனை நடக்கவேண்டும் என்று எல்லோரும் ஒருமுகமாகவிரும்பிவிட்டால்நாம்விரும்பாத ஒன்று நாளடைவில்தானாக மக்கள் அரங்கிலிருந்து விலகிவிடும். ....தமிழகத்தில் ஒவ்வொரு அண்ணனும் தம்பியும் தமிழில்தான் வழிபாடு நடைபெறுதல் வேண்டுமென்று எண்ணுதல் வேண்டும்' (28-2-54 தினமணி) என்கிறார். 'நாம் விரும்பாத ஒன்று' என்பது இங்குச் சம்ஸ்கிருத அர்ச்சனை. அவ்வர்ச்சனை விலகவேண்டுமாயின், ஒவ்வொரு தமிழ அண்ணனும் தம்பியும் தமிழர்ச்சனையே நடைபெற வேண்டுமென ஒருமுகமாக எண்ணுக என்பது அவருபதேசம். அவ்வாக்கியத்தில் 'தமிழில்தான்' என இருமுறை வருகிறது. அத் 'தான்' களின் வேகத்தையுங் கருதுக. அவ்வுபதேசியாராகிய நவீனருக்குச் சம்ஸ்கிருதத்திற் பக்தியோ, சம்ஸ்கிருத அர்ச்சனையை எதிர்ப்பவரை எதிர்க்கவல்ல ஆர்வமோ இருக்கமுடியுமா? சம்ஸ்கிருதம் தமிழகத்தைவிட்டு விரைவில் ஒழியவேண்டும்: அப்படி ஏங்குகிறாரவர். அவருக்கு அம்மொழி முக்கியமன்றுதான்.

தமிழும் முக்கியமல்ல என்றாரவர், அதிலும் அவருள்ளங் கலக்கவில்லை. ஏன்? அதற்கு விடை பிறகு சொல்கிறேன்.

'சைவஞ் சிவத்தொடு சம்பந்தமென்றான் சைவம் வளர்க்குஞ் சம்பந்த மூர்த்தி' ஆகலின் அச்சமயமும் நித்தியமே. நவீனரும் 'காலவெள்ளத்தையும் கடந்து நின்று விளங்குவது சைவம்' (13-8-55 தமிழ்நாடு) எனக் கூறி அதை ஆமோதிக்கிறார். ஆனால் 'சைவம்செத்துக்கொண்டிருக்கிறது' 'நடமாடும் கோவில்களுக்கு ஈயாவிட்டால் சைவம் காலவெள்ளத்தில் அழிந்துவிடும்' (13-8-55 தமிழ்நாடு' என்பதும் அவர் பேச்சு. சைவம் காலவெள்ளத்தைக் கடந்ததென்பதை அவர் சத்தியமாகச் சம்மதிக்கிறாரா? ஆயின் நடமாடுங் கோயில்களுக்கு ஈயாவிட்டாலும் அஃதழியவேமாட்டாது. காலவெள்ளத்தைக் கடந்து நிற்பது காலவெள்ளத்தில் எப்படி அழியும்?

(தொடரும்)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத மாசி-4

# பர்மா நிலங்கள்

பர்மாவிலுள்ள நிலங்கள் **1953**ம் ஆண்டிலிருந்து தேசீய மயமாக்கப் பட்டுள்ளவற்றிற்கு நட்ட ஈடுகோரி விண்ணப்பங்கள் அனுப்பலா மேன்று பர்மா அரசாங்கம் அறிவித்துள்ளது. வெகுநாட்களாக இவ் வேண்டுகோள் நிறைவேற்றப்படாமலிருந்து வந்தது.

வரும் ஆண்டில் தேசீயமயமாக் கப்பட்ட நிலங்களுக்கு நட்ட ஈடு கொடுக்கப் பர்மிய அரசாங்கம் **5,00,000** கையட்டுகளை ஒதுக்கி யிருப்பதாகத் தெரிகிறது. இதுவரை தேசீய மயமாக்கப்பட்ட நிலங்களின் மொத்த அளவு ஏறக்குறைய **67,600** ஏக்கராகும். இந்நிலங்கள் அனைத்திற்கும் நட்ட ஈடு கொடுபட்டு முடியும் வரையில் இவ்வாறே ஆண்டுதோறும் நிதி ஒதுக்கப்பெற்றுத் தொடர்ந்து கொடுக்கப் பெற்றுவரும் என்று தெரிகிறது.

பர்மிய நில உரிமையாளர்களில் இந்தியர்கள் பெரும்பாலானவர்கள். அதிலும் தென்னிந்தியர்கள்-அவர்களிலும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் குறிப்பிடத்தக்கவர்கள். பலகாலமாக இந்தியா பர்மாவுடன் கொண்டிருந்த நட்பினால், தன்னுடைய தகுதியையும் கருதாது பல கோடி ரூபாயைப் பர்மாவுக்கு இந்தியா கடனாகக்கொடுத்திருக்கிறது,

தென்னிந்தியாவிலுள்ள தமிழர்களிற் பலர் பர்மாவிற் குடியேறிப் பர்மிய மக்களோடு ஒன்றிக்கலந்து உறவாடிக் கொண்டிருக்கிறார்கள். பர்மியநாடு செல்வ வளமுள்ளதாகத் திகழுவது, தென்னிந்தியர்களால்தானென்பதை யாரும் மறுக்க முடியாது. நாட்டுக்கோட்டைச் செட்டியார்களது லேவாதேவித் தொழிலாலேயே பர்மிய மக்கள் நல்வளம் பெற்றார்களென்றுசொன்னால் மிகையாகாது.

எந்த வகையிலும் பர்மா நாட்டிற்கு நலத்தை நல்கிய தென்னிந்தியர்களுக்கு முதற் சலுகைகாட்டி நட்டஈடுகொடுக்க வேண்டியது பர்மிய அரசாங்கத்தின் கடமையாகும். திரைகடலோடித் திரவியம் தேடச்சென்ற செட்டியார்களின் முதற்பொருள், பர்மிய நாட்டில் நில முதலிய வடிவங்களை எடுத்து மாட்டிக்கொண்டிருக்கின்றன.

இந்தவேளையில், தென்னிந்திய வர்த்தகர் சங்கத்தில் இந்தியாவிலுள்ள பர்மியத் தூதுவர் கூறிய செய்திகள் ஒருவாறுமனநிறைவை அளிக்கின்றன. ஷசபையின் துணைத்தலைவரான திரு, கே. கோவிந்தன் அவர்கள் குறிப்பாக நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கு ஏற்பட்டுள்ள நட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள்.

நில உரிமையாளர், எந்த நாட்டைச் சேர்ந்தவராயினும் நட்டஈடு பற்றிய விண்ணப்பத்தை அனுப்பலாமென்று பர்மிய அரசாங்கம் அறிவித்திருக்கிற இந்தச்சமயத்தில் பர்மாவில் பெருநட்டம் அடைந்திருக்கிற இந்தியர்களுக்குப் போதுமான நட்டஈடு கிடைக்கத்தக்க முயற்சியை எடுத்துக்கொள்ள இந்திய அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம்.

---

## தேதிப்படம்

*கோயமுத்தூர், காளீசுவரர் மில்ஸ் வெளியிட்டது. வானளாவிய காளையார்கோவில்கோபுரப் படத்தைக்கொண்டு, விசேட நாட்கள்-அரசினர் விடுமுறை நாட்களாதிய விளக்கங்களுடன் வெளியிடப்பெற்ற 1956ம் ஆண்டு,மாதத்தேதிப்படம் வரப்பெற்றோம்.*

## தை மகப் பேருவிழா

பெருங்குளம் பிப் 8-

செங்கோல்மடம் ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தரசத்தியஞான பரமாசாரிய சுவாமிகள் நிர்வாகத்திலுள்ள இவ்வூர் ஸ்ரீ திருவழுதீசுவர சுவாமி தேவஸ்தானத்தில் தை மகப் பெருவிழா ஆஸ்திக அன்பர்கள் நற்பணியாலும் பொருள் உதவியாலும் மிக்கச் சிறப்பாய் நடைபெற்றது.

ஸ்ரீ கோமதி அம்பிகை சமேத திருவழுதீசுவர சுவாமி பத்தாம் திருநாள் திருத்தேர் எழுந்தருளி வீதிவலம்வந்து பக்த கோடிகளுக்குக் காக்ஷி கொடுத்தருளினர்.

## கல்கத்தா

பாரதி தமிழ்ச் சங்கத்தின் பிப்ரவரி மாத நிகழ்ச்சிகள்: 4உ ஸ்ரீ ஏ ஸி ரங்கராஜன்'நான் படித்த சிறுகதைகள்' 5உ எம் கே மஜூம்தார்எம்ஏ தமிழரல்லாதார்க்குத் தமிழ்வகுப்பைத்தொடங்கிவைப்பார். இ.சி.சாஸ்திரி வகுப்புநடத்துவார்,11உசி சுந்தரம் 'மேடைப்பேச்சு' 16உ சங்க தினம் 25உ ஸ்ரீ எஸ் ரங்கராஜன் "'இலக்கிய சந்தையில்....யானும்', கூட்டங்கள் மாலை 5-30 மணிக்கு ஆரம்பமாகும்.

## அன்னம்பாலிப்பு

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசிஅருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளின் நினைவு நாளாகிய வைகாசிஅமரபட்சம் திருதியை அன்று சிதம்பரத்திலுள்ள ஸ்ரீ காசிமடத்தில் அன்னம்பாலிப்பு நடந்துவர வேண்டியதற்காக ரூபாய் 20 ஆயிரம் நிதி வழங்கியுள்ளார்கள். அதற்காக வேண்டிய சான்றுகள் சிதம்பரம் பதிவுஅகத்தில் பதிவு செய்யப்பட்டன.

இதற்கு முன்னர் மேற்படி சுவாமிகளின் நினைவு நாள் அன்று காசி, இராமேசுவரம், ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர் சென்னை, இமயமலை அடிவாரம் (அரித்துவார்) கன்னியாகுமரி, திருப்பனந்தாள், மதுரை ஆகிய தலங்களில் அன்னம்பாலிப்பு நடைபெற்றுவருவதற்காக ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் 1 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் நிதி வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## மலேயாவுக்கு முழுவிடுதலை

லிவர்பூல் பிப் 7–

1957ம் ஆண்டு ஆகஸ்டு 31ம் தேதியன்று பிரிட்டிஷ் காமன் வெல்த்துக்குள் இருக்கும் முறையில் மலேயாவுக்கு முழுச் சுதந்திரம் அளிக்கப்படும் என்று இன்று அறிவிக்கப்பட்டது.

மலேயாவின் முதல் அமைச்சரான இளவரசர் அப்துல் ரஹ்மன், சிர்க்பி என்ற இடத்தில் நடைபெற்ற மலேய மாணவஆசிரியர்கள் கூட்டத்தில் இதைஅறிவித்தார். கடந்த 3வாரங்களாக இதைப்பற்றி இவர் பிரிட்டன் அரசாங்கத்துடன் பேச்சு நடத்திக்கொண்டிருந்தார். அவர் மேலுங் கூறியதாவது:

முழுச் சுதந்திரம் அளிப்பதற்கு முன்னர், இப்போதிருந்து சுயாட்சி அளிக்கப்படும்.

---

## பர்மாவில் நிலமுள்ள இந்தியர்

சென்னை பிப் 7

நிலங்களைத் தேசியமயமாக்கும் சட்டத்தின்படி பர்மாவில் நிலமுள்ள இந்தியர்களுக்குநியாயமானமுறையில் நட்டஈடு அளிக்கப்படும் என்று இந்தியாவில் உள்ள பர்மாத் தூதுவர் திரு சிது ஆங்கோ இன்று இங்கு கூறினர்- தென்னிந்திய வணிகர்கள் சங்கத்தில்பேசுகையிலேயே இவர் இவ்வாறு கூறினர்.

நட்டஈடு அளிக்கும் விடயம் ஒரு பெரும் பிரச்சினையாகையால் இதை விரைவில் செய்ய முடியாது என்றும் இவர் கூறினர்;

சபையின் துணைத்தலைவரான திரு கே கோவிந்தன் குழுஉறுப்பினர்களை வரவேற்றுப் பேசுகையில் பர்மாவில் நிலங்கள் தேசீயமயமாக்கப்பட்டதால் சென்னை மாகாணத்தைச் சேர்ந்தவர்களுக்கு, குறிப்பாக நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கு நட்டம் ஏற்பட்டிருக்கிறது என்று கூறினர். ஆகையால் நிலச்சொந்தக்காரர்களுக்கு நியாயமான நட்டஈடு அளிக்குமாறு கேட்டுக்கொண்டார்-

## தங்கம், வெள்ளி

மதுரை பிப் 13

| | | | |
|---|---|---|---|
| பாட்லா | 97 | 4 | 0 |
| சவரன் | 62 | 8 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 62 | 0 | 0 |
| வெள்ளி 100தோலா | 178 | 0 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 | 0 |

## படித்தோம்!

தேவாரப் ப தி கங்கள்:- தி ரு ஞானசம்பந்த மூர்த்தி நாயனர் அருளிச்செய்த மூன்ருவது திரு முறை. குறிப்புரை ப ட ங் களு டன், தருமபுர ஆ தீ ன வெளி யீடு எ ண் 348. டிம்மி 1X8 சைஸ். பக்கங்கள் 900. விலை ரூ 5-12-0. தபால் செலவு ரூ 1-9-0. கிடைக்குமிடம்: காஷியர், தரும புர ஆதீனம், தருமபுரம். மாயூ ரம் வழி.

11-6.1955ல் ந டை பெற்ற தருமபுர ஆதீன மு த ற் குரவர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்ததேசிக பரமாசாரிய சுவாமி க ள் குரு பூஜைவிழா ம ல ர ா க ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திரு வருளாணையால் வெ ளி யிடப் பெற்றது. குறிப்புரையாசிரியர் பண்டித அ. கந்தசாமிப்பிள்ளை யவர்கள். ஆதீனப் பல்கலைக் கல் லூரிப் பே ர ா சி ரி ய ர்களது ஆராய்ச்சிக் க ட் டுரைகள், கல் வெட்டுச்சான்றுகள், ஒப்புமைக் குறிப்பு, சாத்திரக்கருத்தடைவு வேதாகமப் பி ர மாணம், சொற் பொருளாராய்ச்சி யாதியனவற் ருலும், நிழற் ப ட ங் களாலும் பெரும்பயன் த ரு கி ன் ற இவ் வெ ளி யீட்டைத் தொடர்ந்து, மற்றைத் தி ரு மு றை களையும் வெளியிட்டுதவ ஸ்ரீலஸ்ரீமகாசந்நி தானம் அவர்கள் கருணையைச் சைவவுல க ம் எ தி ர் நோக்கிக் கொண்டிருக்கிறது;

### குருபூசை விழா

கண்ணப்ப நாயனர் குருபூசை விழா நாகர்கோவில் நன்னெறி மன்றத்தின் 26 வ து பிரார்த்த னைக் கூட்டமாகக் கோட்டாறு தேசிகவினயகர் உ ய ர் நிலைப் ப ள் ளி யி ல் 29.1-56 ஞாயிறு மாலையில் சிறப்புற ந டை பெற் றது. சுசீந்திரம் துறைசை மட ப தி திருஞானசம்பந்த சுவாமி கள் த லை மை தாங்கினர். திரு முறை ஓதுதல், தியானம், பசனை நன்மொழி கேட்டல், மௌனம் ஆகிய பதிவு நிகழ்ச்சிகள் வழக் கம்போல் நிறைவேறின. வெள்ளி மலை ஸ்ரீமத் சுவாமிமதுரானந்தா ஜியும் தலைவர் தம்பிரான்சுவாமி களும் திருத்தொண்டர்புராணத் தைத் து ணை ய ா கக் கொண்டு நாயனரைப்பற்றி அ ரி ய விரி வுரைகள் நிகழ்த்தினர். திரு A கந்தசாமிப்பிள்ளை அ வ ர் க ள் சிவானந்தலகரியிலுள்ள கண்ண ப்பதேவர் தோத்திரக் கருத்தை இனிது விளக்கிப்பேசினர்.

---

## தெரிந்து கொள்ளுங்கள்

இந்தியாவில் வருஷத்துக்குச் சுமார் 60,000 டன் முந்திரிக் கொட்டை உற்பத்தியாகிறது; முந்திரிக்கொட்டை வியாபாரத்தில், உலகமார்க்கெட்டில் இந்தியாதான் பிரதான ஸ்தானத்தை வகிக்கிறது. இவ்வர்த்தகத்தில் 90 சதவிகிதம் இந்தியர்களின் கையில்தான் உள்ளது. இந்தியாவிலிருந்து முந்திரிக் கொட்டை இறக்குமதி செய்யும் நாடுகளில் அமெரிக்காவும், பிரிட்டனும் முதன்மையானவையாகும். அவை இரண்டும் இந்திய உற்பத்தியில் 75 சதவிகிதத்தை இறக்குமதி செய்கின்றன.

தபால்-தந்தி இலாகாவின் மூலதன ஆஸ்திகளின் மொத்த மதிப்பு இந்தியா பிரிவினையாவதற்கு முன்பு 33கோடிரூபாயாக இருந்தது, முதலாவது ஐந்தாண்டுத் திட்டகால ஆரம்பத்தில் 50கோடி ரூபாயாக உயர்ந்துவிட்டது; திட்டகாலஇறுதிக்குள்ளாக அது 92கோடி ரூபாயாக உயர்ந்து விடுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

பீஹாரில் கங்கை நதிக்குக் குறுக்கே அமைக்கப்படவிருக்கும ரயில்-ரஸ்தா பாலத் திட்டத்துக்கு மொத்தம் 16 கோடி ரூபாய் செலவாகுமென்று மதிப்பிடப்பட்டுள்ளது; அந்தப் பாலத்துக்கு அஸ்திவாரக்கல் அடுத்த மாதம் நாட்டப்படும்; அப்பாலம் அதுபோன்றவற்றில் உலகத்திலேயே மிகப்பெரியதாகும்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் 40லட்சம் ஏக்கரா நிலத்தில் மண்வளப் பாதுகாப்பு வேலை மேற்கொள்ளப்படும்; இதுசம்பந்தமாகச் சுமார் 70லட்சம் ஏக்கரா நிலம் சர்வே செய்யப்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இவ் வேலைக்குத் தேர்ச்சிபெற்ற தொழிலாளர்கள் தேர்ச்சி பெறுத தொழிலாளர்கள் ஆகியோரில் 24லட்சம் பேரும், நிர்வாக சிப்பந்திகள் குமாஸ்தாக்கள், தொழில்நுட்ப சிப்பந்திகள் ஆகியோர் 5,000 பேரும் தேவைப்படுவார்கள்.

இந்தியாவில் யந்திரக் கருவிகளை உற்பத்தி செய்வதற்காகத் தற்போதுள்ள உற்பத்தி சக்தியை புனர்பரிசீலனை செய்வதற்காகவும், நாட்டின் தேவைகளை மதிப்பிட்டறிவதற்காகவும், 10 அங்கத்தினர்கொண்ட

கமிட்டியொன்றை இந்திய சர்க்கார் ஏற்படுத்தியுள்ளார்.

இந்தியாவில்தற்போது மொத்தம் 5,000 தந்தி ஆபீசுகள் உள்ளன; இந்தியா சுதந்திரம்பெற்ற சமயத்தில் மொ த் தம் 3,324 தந்தி ஆ பீ சு களே இருந்தன. இவைதவிர, ரயில்வேக்களுக்காகவும், பல்வேறு பாசனத் திட்டப் பி ர தேசங்களிலும் 4,000 தந்தி ஆபீசுகள் ஏ ற் ப டுத்தப்படுகின்றன.

பள்ளி செல்லும் வயதடைந்துள்ள குழந்தைகளில்,வாஸ்தவமாகப் பள்ளிக்கூடம்சென்றுவருபவர்களின் விகிதாசாரம், இப்பொழுது சுமார் 50 சத விகிதத்துக்கு உயர்ந்திருக்கிறது. இது 1947ல் 30 ச த விகிதம் 1951ல் 40 சதவிகிதமாகவும் இருந்தது.

இந்தியாவில் அ ம் மோனியம் சல்பேட் உ ப யோ கம் 1950ல் 2.7 லட்சம் டன்னாக இருந்தது, 1955ல்6லட்சம்டன்னாகஉயர்ந்துவிட்டது. இந்த அளவு, முதல் திட்ட லட்சிய அளவைக் கிட்டத்தட்ட எட்டியிருக்கிறது.

இந்தியாவிலேயே உ த் த ரப் பிரதேசத்தில்தான் பவர் ஆல்கஹால் உற்பத்திச்சாலைகள் அதிகமாக உள்ளன. நாட்டில் உள்ள 19 உற்பத்திச்சாலைகளில்,மொத்தம் 12 உற்பத்திச்சாலைகள் இப்பி ர தேசத்தில் அமைக்கப்பட்டுள்ளன.

---

## இந்திய டெலிபோன் தொழிற்சாலை

ப ங் க ளூ ரு க்குக் கிழக்கே ஆறரைமைல் தூரத்தில், சென்னைக்குச் செல்லும் ர ஸ் தாவில் அமைந்திருக்கிறது இ ந் தி ய ா வின் 'டெலிபோன் நகரம்' என்றழைக்கப்படுகின்ற தூரவாணி நகர். இங்குதான் இந்தியாவின் அதிநவீனத் தொழிற்சாலைகளில் ஒன்றாகிய இந்திய டெலிபோன் தொழிற்சாலை இருக்கிறது. இந்திய சர்க்காரால் 1948ம் வருஷத்தில் ஸ் தா பிக்கப்பட்ட இந்த ஸ்தாபனம் இப்போதுஒருதனிப்பட்ட லிமிடெட் கம்பெனியாக இயங்கிவருகிறது; இதன் பங்குகளில் பெரும்பகுதி இந்தியசர்க்கார் வசம் இருக்கிறது.

அதிநவீனமான ய ந் தி ர க் கருவிகள் இத்தொழிற்சாலையில் உள்ளன; பிற்காலத்தில் விஸ்த

ரிக்கக்கூடியபடி நவீன முறைகளைப் பின்பற்றி இத்தொழிற்சாலை அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவின் சொந்த உபயோகத்துக்கு வேண்டிய டெலிபோன் கருவி அத்தனையும் இப்போது இந்திய டெலிபோன் தொழிற்சாலையிலேயே தயாரிக்கப்பட்டு வருகின்றன.

டெலிபோன் கருவிகள், தானே இயங்கும் டெலிபோன் நிலைய சாதனங்கள் டிரான்ஸ்மிஷன் சாதனங்கள் ரயில்வே கன்ட்ரோல் டெலிபோன் சாதனங்கள் ஆகியவை இங்கு தயாரிக்கப்படுகின்றன. இந்தச் சாதனங்களைத் தயாரிப்பதற்குவேண்டிய சகல பாகங்களும் இத்தொழிற்சாலையிலேயே உற்பத்தி செய்யப்படுகின்றன.

படத்தில்: ஒரு பெண்தொழிலாளி டெலிபோன் பகுதிகளைப் பொருத்திக் கொண்டிருக்கிறார்.



ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-19

மன்மத - மாசி-11

26-2-56

வியாழன் வெளியீடு

தேவகோட்டை

ஆண்டுச்சந்தா ரூ 4

வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## குறிஞ்சி

வரையாமையால் ஆற்றாமை மிக்கு வருந்திய தலைவி, சிறைப்புறத்தானாகிய தலைவன் கேட்க அழிந்து கூறியது.

நோயுங் கைம்மிகப் பெரிதே மெய்யுந், தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே, யொய்யெனச் சிறிதாங் குயரிய பையென, முன்றிற் கொளினே நந்துவள் பெரிதென, நிரைய நெஞ்சத் தன்னைக் குய்த்தாண், டுரையினி வாழி தோழி புரையி, னுண்ணே ரெல்வளை நெகிழ்த்தோன் குன்றத், தண்ண னெடுவரை யாடித் தண்ணென, வியலறை மூழ்கிய வளியென், பசலை யாகந் தீண்டிய சிறிதே. 236 :-நம்பிகுட்டுவனார்

தோழீ! நீ வாழ்வாயாக. எனது காமநோயும் கைமிக்குப் பெரியதாயிற்று. உடம்பும் தீயைக் கக்குகின்ற கொதிப்பால் வெப்பமாயிருக்கின்றது. குற்றமற்ற நுண்ணிய நேர்மையையுடைய ஒளிமிக்க வளையை நெகிழச்செய்த தலைவனது மலையிலே பெரிய நீண்ட கொடுமுடியின் கண்ணே பரவிக் குளிர்ச்சி யுறும்படி அகன்ற பாறையில் அளாவிய காற்றானது எனது பசலை பூத்த உடம்பிலே சிறிது படும்படி நீ விரைந்து சென்று, உயர்ந்த நம்முடைய முன்றிலிலே இவளைச் சிறிது கிடத்தினால் நோய் நீங்கப் பெறுவாளென்று நரகம்போன்ற நெஞ்சையுடைய நமது அன்னைக்குச் சொல்லுவாயாக.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்று ணிற்ற லவர்வினையால்-வித்தகமாம்
வேட்டுவனு மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து.

:-மெய்கண்ட தேவ நாயனுர்

உரை:- 'மண் போல்-நிலங் குளிர்ந்தபொழுது அதன் கண்ணே, வித்து உண்டா-விதை உளதாக, மூலம் முளைத்தவா-அதனிடத்திலிருந்து முளை தோன்றியவாறுபோல, (மாயையானது) தாரகம் ஆம்-தனக்கு ஆதாரமாய்நின்று தோற்றுவிக்கின்ற, அத்தன் தாள் நிற்றல்-இறைவனது சத்தியின்பாலே நிற்றலால், அவர் வினையால்-அச்சத்தி சங்கற்பித்தபொழுது அவரவர் வினைக்கிடாக, வித்தகமாம்-இயல்பு பிறழாமற் பயக்கும் சதுரப்பாடுடையதாம், வேட்டுவன் ஆம் அப்புழுப்போல்-வேட்டைவாளியாக விரும்பும் புழுவுக்குஅவ்வடிவை அவ்வேட்டைவாளி கொடுத்தல் போல, வேண்டு உருவைத் தான் கொடுத்து-அவாவர் விருப்பத்தினுல் வருவதாகிய வினைக்குத் தக்க வடிவத்தையும் பயனையும் மாயையிலிருந்துதோற்றுவித்து, கூட்டான்-கூட்டுவான்' என்பதாகும்.

சிவஞானபோத இரண்டாம் சூத்திரம் பாச உண்மையைநிலைநாட்டுவது. பசுவைப் பற்றி நிற்கின்ற பாசத்தை ஆணவம், மாயை, கன்மம் என்று மூன்றுகக் கூறுவர். ஆணவமலத்தின் உண்மையை முதற்சூத்திரத்தில் விளங்கவைத்த ஆசிரியர் மாயா கன்ம மலங்களின் உண்மையை இரண்டாஞ் சூத்திரத்தில் தெளிவுபடுத்துகிருர்.

உலகத்தைத் தோற்றுவிக்கின்ற இறைவன், உயிர்களோடு ஒன்ருயும் வேருயும் உடனுயும்

நின்று தனது சத்தியால் உயிர்களின் இருவினை கட்கேற்பப் படைப்பான் எனக்கூறி, உலகத்திற்கு முதற்காரணமாகிய மாயையும் துணைக் காரணங்களாகிய கன்மமும் திரோதான சத்தியும் உண்டென்பதை இரண்டாஞ் சூத்திரம் ஏது திருட்டாந்தங்களோடு நிறுவுகின்றது.

நான்கு அதிகரணங்களையுடைய இச்சூத்திரத்தின் முதலதிகரணம் உயிர்களும் இறைவனும் அபேதமென்னும் ஏகான்மவாதிகளையும், பேதமென்னும் மாத்துவரையும், பேதாபேதமென்னும் பாஞ்சராத்திரிகளையும் மறுத்து அம்மூன்றுமாய் அத்துவிதமாய் நிற்பனென்று கூறும். இரண்டாமதிகரணம் உலகத் தோற்றத்திற்கு மாயையும் கன்மமும் வேண்டப்படுவன. அதனால் இறைவனது சுதந்தரத்திற்கு இழுக்கில்லையென்று கூறும். மூன்றமதிகரணம் இறந்தவுயிர் மீளவும் பிறக்குமென்று விளக்கும் நான்காமதிகரணம் வினைப்பயனை உயிர்களுக்குக் கூட்டுவிக்கும் சத்தி, சூரியனும் அதனொளியும்போல முதல்வனோடு பொருளால் ஒன்ருயும் தன்மையால் இரண்டாயும் நிற்பதை உணர்த்தும்.

உலகத்திற்கு முதற்காரணம் மாயை. எனவே அவ்வுலகம் மாயையில் தோன்றி ஒடுங்குவதன்றி அதனைத் தோற்றவும் ஒடுக்கவும் ஒரு கருத்தா வேண்டுவதில்லையென்பது சாங்கிய நூன் முடிபு. யாதுயாண்டு ஒடுங்கும் அஃததனிலுற்பத்தியாம் என்னும் உண்மை பற்றியெழூமக்கூற்றை, ஆசங்கித்துக் கொண்டு இவ்வுதாரணச் செய்யுளை ஆசிரியர் அருளிச் செய்துள்ளார்.

நிலத்திலிட்ட வித்து, அந்நிலங்குளிர்ந்த வழியன்றி முளை தோன்றுமாறில்லை. மாயை போல் வித்தும் உலகம்போல் முளையுமாகலின், வித்துக்கு ஆதாரமாகிய நிலக்குளிர்ச்சி போன்றது மாயைக்கு ஆதாரமாகிய சத்தியின் சங்கற்பம். எனவே, சத்தி சங்கற்பமில்லாத பொழுது மாயையின் தொழிற்பாட்டுக்கு இடமின்மை உணரற்பாலதாம். ஆகையினுல், மாயையினெடுங்கித் தோன்றியஉலகம், அதற்காதாரமாகிய இறைவன் சத்தியில் ஒடுங்கித் தோன்றியதாமென்று கொள்ளுதல் வேண்டும்.

மாயையிலிருந்து தோன்றிய உலகத்தைச் சத்தியிலிருந்து

தோன்றியதாகக் கூறுவது, கிழங்கிலிருந்து தோன்றிய தாமரையைச் சேற்றிலிருந்து தோன்றியதாகப் பங்கயமென்று கூறுவது போன்றதாகும். உலகம் மாயையில்தோன்றியதெனவே, சத்தி இறைவனிற் பிரிப்பின்றி நிற்குமாதலின், இறைவனில் தோன்றியதெனவே கொள்ளப் பெறும். இதனையே சிவஞான சித்தியார் 'உயிரவையொடுங்கிப் பின்னும் உதிப்பதென் அரன்பால்' எனவும் 'உலகவனுருவிற் றோன்றி ஒடுங்கிடும்' எனவும் கூறியது.

இக்கருத்தை அறியாதவர்கள் மாயையென ஒன்றில்லையெனவும் உலகத்திற்கு இறைவனே முதற்காரணமெனவுங் கூறுவார்கள். உலகம் சடமாகிய காரியப் பொருளாதலால் அதற்கு முதற்காரணமும் சடமாயிருத்தல் பொருந்துமேயன்றிச் சித்தாயிருத்தல் பொருந்தாது. கடவுள் சித்துப்பொருள். சித்தினிடத்திலிருந்து சடந்தோன்றுதல் இன்மையின் உலகத்துக்கு முதற்காரணம் கடவுளென்றல்பொருந்தாது.

சிலந்தியாகிய சித்திலிருந்து நூலாகிய சடம் தோன்றுவதும் கோமயமாகிய சடத்திலிருந்து தேள் முதலாகிய சித்துத்தோன்றுவதும் உண்டாதலால், கடவுளாகிய சித்திலிருந்து உலகமாகிய சடந்தோன்றுமென்று பிறர் கூறுவர். நூலாகியசடம் சிலந்தியின் உடலாகிய சடத்திலிருந்து தோன்றியதன்றி அதன் உயிராகிய சித்திலிருந்து தோன்றவில்லையென்பதும், தேள் முதலியவற்றின் உடலாகிய சடம் கோமயமாகிய சடத்தில் தோன்றியதன்றி அவற்றின் உயிராகிய சித்து அதிலிருந்து தோன்றவில்லையென்பதும் உணரத்தக்கனவாம்.

இனிச் சடமாகிய சிலந்தியுடலில் நூல் தோன்றுதற்கு அவ்வுடலோடு உயிர் இருத்தல் வேண்டும். எனவே, சிலந்தி நூலாகிய காரியத்திற்கு உயிர் நிமித்த காரணமும் உடல்முதற் காரணமுமாகும். இதுபோலவே உலகமாகிய காரியத்திற்கு இறைவன் நிமித்த காரணமும் இறைவனையின்றித் தனித்து நில்லாத மாயை முதற்காரணமுமாயிருக்கும்.

மேற்கண்ட வெண்பாவில் நிலமும் வித்தும் முளையும் உவமானம். சத்தியும் மாயையும் நிலமும் உவமேயம். உவமானத்தில் 'மண்குளிர்ந்து' என்று கூறியதால், உவமேயத்தில் சத்தியின்

சங்கற்பம் கொள்ளப் பெற்றது. நிலத்தின் குளிர்ச்சி போன்றது சத்தியின் சங்கற்பம்.

பிரமமே உலகமாய்த் தோன்றுவதன்றி மாயையென வொன்றில்லை யென்பர் பரிணாமவாதிகள். மாயையை அநிர்வசனம் (உறுதியாய்ச் சொல்லக் கூடாதது) என்பர் மாயாவாதிகள். மாயை இறைவனின் வேறில்லை யென்பர் பாஞ்சராத்திரிகள். பிரமத்தில் மாயை அடங்கியிருந்து அதிலிருந்து உலகந் தோன்றுமெனவும், மாயை உள்பொருளே யெனவும், மாயை முதல்வனின் வேறு எனவும் உவமானங் காட்டி ஆசிரியர் அம்மூவர் கூற்றையும் மறுத்துள்ளார்.

பலவேறு வகையான உலகந் தோன்றுதற்கு இறைவன் பலவேறு வகைப்படச் சங்கற்பித்தற்குக் காரணம் அவரவர் வினையேயாகும். வினைவயத்தால் உலகை இறைவன் தோற்றுவிப்பானென்னில் அவனது சுதந்திரத்திற்கு இழுக்காகுமல்லவா? தன் வயத்தனாகிய இறைவனுக்கு வினைவயத்தானொன்று பிறவயம் கூறுதல் பொருந்தாது. ஆகவே தான் அவரவர் விரும்பிய வண்ணம் விரும்புதலாகிய வினைக்குத் தக்க வடிவையும் பயனையும் இறைவன் தோற்றுவித்துக்கூட்டுவானென்று இறுதியிற்கூறினார்

வேட்டைவாளி யென்பது குளவிகளில் ஒரு சாதி. புழு வகைகளில் வேட்டைவாளியாக விரும்பும் இனமுண்டு. அவ்விருப்பமுடைய புழுவுக்கு அது விரும்பிய தன் வடிவை, அதை எடுத்து வைத்திருக்கும் குளவி கொடுக்கும். அதுபோலவே இறைவனும் உயிர்களுக்குவேண்டியவற்றை அவை விருப்பத்திற் கேற்பக் கொடுப்பானுதலின் அதுகொண்டு அவனது சுதந்திரத்திற்கு இழுக்கில்லையென்பதை உணரலாம். 'வேண்டுவோர் வேண்டுவதே யீவான் கண்டாய்' என்ற அப்பரடிகள் திருவாக்கு இக்கருத்தைப் புலப்படுத்துவதே யாகும்.

உயிர்களுக்கு வடிவத்தையும் பயனையும் கூட்டுதற்கு வரம்பாய் நிற்பது அவரவர் வினையேயன்றி; அவைவந்து கூடுதற்குக் காரணமாய் நிற்பது அவ்வினையல்லவாதலின் அதற்குச் சுதந்திரமின்மையும் அதைக் கூட்டுகின்ற இறைவனுக்குச் சுதந்தரமுண்மையும் பெறப்படும்

இவ்வாறு மாயையுண்மையையும் அதுதொழிற்படுமாற்றையும் முதலானவற்றை ஏது எடுத்துக் காட்டுகளால் தெளிவுபடுத்தும் ஞானப்பெருங்கருவூலமாகிய சிவஞானபோதம் நமக்குச் செய்கின்ற உதவிக்கு அளவேது?

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

காலவெள்ளத்துக் குட்பட்டதே அவ் வெள்ளத்தில் அழியும். ஆனால் சைவசமூகத்திலிருந்து அச்சமயத்துக்கு விலக்காயப் போனாரும் போவோரும் உளர். அவரே அச் சமயத்துக்குச் செத்துக்கொண்டிருப்பவர். அதற்குக் காரணம் நட மாடுங் கோயில்களுக்கு ஈயாமை யன்று. அவரை அங்ஙனஞ் சாகடிப்பவர் நவீனரே. அச்செயலில் நாஇன்புற நக்கிக் கொல்லுங் கவைமாப் போல்வா ரவர். எப்படி?

'சைவ சமயம் தழைத்தோங்க அடிப்படை உண்மையை அறிய வேண்டும். இதை மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டும்' (11-8-55 தமிழ்நாடு) என்கிறுரவர். அச்சமயத்தின் அடிப்படையாவது யாது? அதனையறியாமல் அடிப்படையென்ற தொடரை மாத்திரம் வழங்குவதிற் பயனில்லை. அச் சமயமும் வளராது. கடவுளொருவனிருக்கிருனென்பதுமாத்திரம் அடிப்படை யாமா? ஆயின் சமயங்கள் பலவாயின தேன்? பரமத நிராகரணஞ் செய்யாமல் சுவமத தாபனமொன்றே செய்து போந்த சமயம் எதுவுமில்லை. அந்நிராகரண தாபனஞ் செய்தவர் சாமானியருமல்லர். அவ்வச் சமயத்தின் தலைவரே அவற்றைச் செய்துவைத்தார். அதனுல் சமய தாபகரென்ற கௌரவம் அவருக்குளதாயிற்று. கடவுளுண்மையை மாத்திரம் அடிப்படையென அவர் கொண்டிலர். நாம் அப்படிக் கோடற்கும் அவரனுமதி கிடையாது; கொண்டால் அவரை அவமதித்தவராவோம். அந்நிராகரண தாபனங்களின் பொருந்துமாற்றை மனிதன் ஆராய்ந்தறிய வேண்டும் அஃ தறிவுக்கு விருந்துமாம். அவனை மேல்நிலையிற் சேர்க்க வல்லதும் அதுவே, ஒரு சமயத்தின் தலைவர் கடவுளுண்மையோடு தம் சமயத்துக்கே யுரியவென அங்ஙனந் தாபித்த மற்றவுண்மைகளுஞ் சேர்ந்த திரட்சியே அவாது சமயத்தின்அடிப்படை. சமயங்கள் பலவாயினமைக்கு அவ் வடிப்படைதான் காரணம். அதை விட்டவன்

அச்சமயத்தவனுகான். அவனே அச் சமயத்துக்குச் செத்தவன். கடவுளுண்மை பல சமயங்களுக்குப் பொது. அதனுல் மாத்திரம் வரக்கூடிய இலாபத்தை ஆராயுஞ் சிரத்தை அவனுக் கிராது. ஆகவே அங்கிராகரண தாபன முறையில் சைவ சமயத்துக்கேயுரியவெனச் சித்தாந்தஞ் செய்யப்பட்டுள்ள கொள்கைகளின் திரட்சியே அச்சமயத்துக்கு அடிப்படை, உயிர்நாடி யென்க. அதையே மக்களுக்கு எடுத்துரைக்கவேண்டும்.

ஆனுல் 'அன்பே சிவம் என்பதே சைவசமயத்தின் உயிர்நாடி. எல்லாமக்களிடத்தும் பிற உயிர்களிடத்தும் அன்பாக நடந்துகொள்பவனே சைவன்? (2-12-55 தமிழ்நாடு) என்கிருர் நவீனர். அன்பு சிவமாவது போல் ஏகோவாவு மாம், அல்லாவுமாம். ஆகாதென்றுசொல்ல முடியுமா? அவரேநபியைப்பற்றி 'அவர் சிறுகச் சிறுக 360 கடவுள்களையும் ஒழித்து இணையற்றவன் ஒருவனே என்று ஆக்கிஞர். விக்கிரக ஆராதனை பிணக்குகள் பலியிடுதல் மதுஉண்ணல் முதலிய பல்வேறு சீர்கேடுகளைக் களைந்து ஒரே குடும்பம்போல்பல இனங்களும் வாழ வழி வகுத்தார். (தொடரும்)

# அழகியநாயக அம்மன் கோவில்

ஈத்தாமொழிக்கிராமத்தின் அண்மையில் இருக்கும் அம்மச்சியார்விளை அழகிய நாயக அம்மன் கோவிலில் ஒவ்வொரு மாத இறுதிச்செவ்வாய்க்கிழமை இரவிலும் அந்தர்யோக விழா நடைபெற்று வருகிறது. சென்ற தை மாத விழா 7-2-56 இரவு ஈத்தாமொழி திரு எஸ் தங்கவேல்நாடார் பி ஏ தலைமையில் சிறப்புற நடைபெற்றது. ஜபம் பஜனை, தியானம், நன்மொழி கேட்டல் ஆகிய பதிவு நிகழ்ச்சிகள் முறையாக நடந்தேறின. இசைச்செல்வர்கள் ரத்னசுவாமி நாடார், மகாராஜன் ஆசாரி, செல்லப்பன் முதலியோர் நாமாவளித் தனிப்பாடல்களால் இன்னிசை பரப்பினர். தலைவர்அவர்கள் ஸ்ரீராமகிருஷ்ண குருதேவரின் உபதேசப் பொன்மொழிகள் சிலவற்றை வாசித்துப் பொருள்விளக்கினர். ஆசிரியர் திரு ஆண்டிநாடார் 'உண்மைப் பக்தி' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினர். 'திருநீலகண்டநாயனர்' என்னும் தலைப்பில் திரு சி வள்ளிநாயகம் பிள்ளை நல்லுரை பகர்ந்தார்.

---

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு


செட்டிநாடு

மன்மத மாசி-11


# மகா மகம்

விண்மீன்கள் இருபத்தேழனுள் மகமும் ஒன்று. மாதங்கள் பன்னிரண்டிலும், பௌர்ணமிதிதியுடன் கூடிவருகின்ற நட்சத்திரங்களைச் சிறந்தனவென்று சொல்லுவர். அச்சிறப்புப்பெற்ற நட்சத்திரங்களின் பெயரை ஒட்டியே மாதங்களின் பெயர்களும் அமைந்திருப்பது அறியத் தக்கதாகும்.

மாசிமாதத்து மகம் பௌர்ணமியுடன் கூடிவரும். ஒவ்வோராண்டிலும் மாசிமகம் உண்டென்றாலும் பன்னிரண்டு ஆண்டிற்கொருமுறை வரும் மாசி மகம் சிறந்ததென்று போற்றப்பெற்று 'மகாமகம்' என்று குறிக்கப்பெறும்.

ஒன்பது கோள்களுள் ஒன்றாகிய வியாழன், பன்னிரண்டு ராசிகளிலும் ராசி ஒன்றுக்கு ஒவ்வோராண்டுவீதம் சஞ்சரிப்பான். சிங்கராசி சூரியனுக்குரியது. அந்த ராசியை வியாழன் அடைய, அதற்குரிய சூரியன் அவன் மகனை சனியின் வீடுகளுள் கும்பராசியாகிய ஏழாமிடத்தைச் சார்ந்துநிற்கப் பௌர்ணமிச் சந்திரன் சிங்கராசியிலுள்ள குருவுடன் சேர்ந்து நிற்க இவ்விருவரையும் சூரியனும், சூரியனை இவ்விருவரும் முழுப் பார்வை பார்க்கும் நாளே, மகாமக நாளாகும்.

இக்கிரகங்களின் முழுப்பார்வை படும்இடம் கும்பகோணத்திலுள்ள மகாமகக் குளம் என்று பெரியோர்கள் அறிந்தே, இப்புண்ணிய காலத்தைக் கும்பகோணத்திற் கொண்டாடி வருகிறுர்கள்.

மகாமகக் குளத்தில் காவிரி. யமுனை, கங்கை, சரசுவதி, பொற்ருமரை, புட்கரணி முதலான தீர்த்த மாதர்கள் வந்து முழுகித் தங்களைச் சார்ந்த பாவங்களைப் போக்கிக் கொள்கிறுர்களென்று தலவரலாறு கூறும். 'தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை சரசுவதிபொற்ருமரை புட்கரணி தெண்ணீர்க், கோவியோடு குமரி வரு தீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக் கீழ்க் கோட்டத்தெங் கூத்தனுரே' என்பது தேவாரம்.

'பூமருவு கங்கைமுதற் புனிதமாம் பெருந் தீர்த்தம், மாமகந்தானுடேற்கு வந்து வழிபடும்கோயில்' என்பார் சேக்கிழார்; பெருமான் 'மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர், வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்ற தாயுமான அடிகள் திருவாக்கின்படி புண்ணியதீர்த்தங்கள் அனைத்திலும் ஆடுவதால் வரும்பயன், மகாமகநாளில், குடந்தை மகாமகத் திருக்குளத்தில் ஆடுவதால் வருமென்பதனுலேயே, இந் நீராடல் சிறந்ததென்று பாரதநாடு முழுவதும் இதில் ஈடுபடுகின்றது.

பாரதநாட்டுப் பொதுவிழா, இதுவாதலால் இப்புண்ணியப் பேற்றைப் பெறப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடுவரென்பதை உணர்ந்து, அரசாங்கமும் ரயில் வேத்துறையும், நகராட்சி மன்றமும் தனிப் பட்டவர்களும் பல வகைகளில் உதவி செய்ய முன் வந்துள்ளதை நாம் பெரிதும்பாராட்டுகிறேம். பொதுமக்கள் மகாமக நீராடி வாழ்வுபெறுவார்களாக.

---

சென்றுடு தீர்த்தங்க
ளானுர் தாமே
திருவாலங் காடுறையும்
செல்வர்தாமே
:-அப்பாடிகள்

## ஸ்ரீ ராமகிருஷ்ண குருதேவர் விழா

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ச தேவரின் அவதாரநன்னுளைமுன்னிட்டு நாகர்கோவில் நன்னெறி மன்றக்காரியாலயத்திலும்ஸ்ரீசித்திரைஇந்துமதநூல்நிலைய த் தி லும்12-2-56ல்விழா நடைபெற்றது. மன்ற நிலையத்தில் அருச்சனை, குருதேவர் வாழ்க்கை வரலாறு, உபதேசமொழிகள், பாராயணம், பஜனை ஆகிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன- ந ண் பகல் ஒருமணிக்குப் பூசை நடந்தது.

ஆர்ய இந்துதர்ம சேவா சங்கத்தின் சார்பில் மாலை 4மணிக்கு ஸ்ரீசித்திரை இந்து மத நூல்நிலையத்தில் ஆரம்பித்த பொதுக் கூட்டத்திற்கு ஜில்லா உதவி நீதிபதி உயர்திரு என். கிருஷ்ணபிரசாத் பி ஏ பி எல் தலைமைதாங்கினர். முனிஸிபல் கமிஷனர்திரு பி சிவகுருநாதன் செட்டியார் பி எ பி எல், திரு மாதவன்நாயர் முதலியோருடைய இன்னிசை மிக்க பஜனையோடு கூட்டம் தொடங்கப் பெற்றது. சங்கம் மிஷனரி சாது பரமேஸ்வரன் பிள்ளை இறைவணக்கக் கீதம்பாடியதும், திரு ஸி வள்ளிநாயகம்பிள்ளை அவையினருக்கு நல்வரவு கூறினர்.

ஸ்ரீராமகிருஷ்ண சிஷ்யர் திரு ஏ. கந்தசாமிப்பிள்ளை,கீதவித்யாபதி திரு மாணிக்கவாசகம்செட்டியார் பி ஏ ஆகியோர்பேசினர், தலைவர் கருத்துரைக்குப்பின் சங்கம் சாதுபிள்ளை அவர்களின் நன்றிகூறலுடன் இனிது முடிவுற்றது. காலைமுதல் இரவுவரை இவ்விழாவின் நிகழ்ச்சிகளில் கலந்து சுசீந்திரம் துறைசை ஆதீனம் மடபதி திருஞானசம்பந்த சுவாமிகளும், வெள்ளிமலை விவேகானந்தமந்திர் ஸ்ரீமத் சுவாமி சத்யானந்த அவர்களும் இதனைப்பொலிவுறச் செய்தனர்.




### தங்கம், வெள்ளி

| மதுரை | பிப் 21 | |
|---|---|---|
| பாட்லா | 99 | 8 0 |
| சவரன் | 63 | 8 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 63 | 8 0 |
| வெள்ளி 100தோலா | 178 | 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 0 |

# "மணிமொழி" மறந்ததா? மறைத்ததா?

'நெல்லைச் செல்வன்'

குன்றக்குடி அடிகளாரது ஆதரவுடன்மயிலாப்பூரிலிருந்து வெளிவரும் 'மணிமொழி' மாதமிருமுறை இதழின், 15-2-56 வெளியீட்டின் தலையங்கத்தில் 'எண்ணிய வண்ணம் அருளும் இறைவன்' என்ற தலைப்பில் 'நாட்டின் அவலநிலை கண்டு உளம் வருந்தி அரற்றி அழுது ஆண்டவனை நோக்கி விண்ணப்பித்தவர் திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார்தான்' என்றும் 'சீர்காழித் திருஞான சம்பந்தர் கோயில் திருப்பணிநிறைவேறியதற்கும் திருவாதவூர்க் கோயில் மின்னொளி விளக்குத் திருப்பணி நிறைவேறியதற்கும் திருப்பூந்துருத்தி அப்பர் திருமடத் திருப்பணித் தொடக்கத்திற்கும் குன்றக்குடிஅடிகளாரே மூலகாரணமென்றும் சொல்லப்பெற்றுள்ளது.

அதில், திருப்பூந்துருத்தித் திருப்பணிக்குத்திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர் திருப்பெருந்திரு காசிவாசி அருள்நந்தித்தம்பிரான்சுவாமிகள் பெரும்பொருள்கொடுத்து நிறைவேற்ற வந்துள்ளார்களென்றும், கணபதி-சங்கர் ஆலை உரிமையாளர் திரு S S அருணாசலம் பிள்ளையவர்கள் பதினாயிரத்தொரு வெள்ளிகள் கொடுத்துள்ளார்களென்றும் கூறப்பெற்றுள்ளது.

மேற்கண்ட அருணாசலம் பிள்ளை அவர்கள் முன்பு அடிகளார் இந்தத் திருப்பணி முயற்சியில் ஈடுபட்டபொழுது திருப்பணிக்காக ரூ 1000 கொடுத்திருக்கிறார்கள்- அடிகளாரது ஆதரவு பெற்று வெளிவரும் மணிமொழி அதைப்பற்றிக் குறிப்பிடாமல் விட்டதற்குக் காரணம் தெரியவில்லை; திருப்பணி முயற்சியைப் பாராட்டும் மணிமொழி, அதற்காகச் சேர்ந்த பொருள் அதற்குப் பயன்படவும் வேண்டிக்கொள்ளும் கடமையை உடையது என்பதைத் தெரிவித்துக் கொண்டு திருப்பெருந்திரு

அடிகளாரிடமும் பொதுத் திருப்பணிப் பொருளை உரியவர்களிடம் சேர்த்துப் பயன்படும் படி செய்ய வேண்டுமென்றும் வேண்டிக்கொள்கிறேன்.

---

## வையாபுரிப் பிள்ளை காலமானார்

சென்னை பிப் 18-

சிறந்த தமிழ் அறிஞர்களில் ஒருவராகிய பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை நேற்றிரவு காலமானார். பேராசிரியர் பிள்ளைக்கு வயது 68ஆகிறது.

இவருக்கு 3 பிள்ளைகளும் 4 பெண்களும் இருக்கிறார்கள்; சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியராகத் திரு; பிள்ளை சுமார் 10ஆண்டுக்காலம் பணியாற்றியுள்ளார். 1926 முதல் 1936 வரை பேராசிரியர் பிள்ளை இப்பதவியை வகித்து வந்தார்.

பேராசிரியர் பிள்ளை தமிழ் நூல்கள் பல எழுதியிருக்கிறார். இலக்கியசுந்தரிகள், தமிழின் மறுமலர்ச்சி, தமிழ்ச்சுடர் மணிகள், தமிழர் பண்பாடு, கம்பர் காவியம் ஆகியவை இவர் எழுதிய நூல்கள்.

## நோட்டீஸ்

புதுக்கோட்டை சப் கோர்ட்டு

O. S. 80 of 48
E. P, 44 of 55

அ. அ. லெ. அண்ணாமலை செட்டியார் —வாதி

G. K. ராமச்சந்திரய்யர் —அட்வகேட்

திருமயம் தாலுகா ராங்கியம் வட்டம் மிதிலைப்பட்டியில்இருக்கும் காசிச்செட்டியார் என்ற வயிரவன் செட்டியார் குமாரர் மு. வயி. வயி. சோமசுந்தரம் செட்டியார் —1ல் பிரதிவாதி

ஷெயாருக்குத் தெரிவிப்பதாவது:—

ஷெிகிம்பரில் N S P நோட்டீசுக்கு 29-2-56க்கு டயம் ஏற்பட்டிருக்கிறது. உமக்கு ஏதேனும் ஆக்ஷேபணை இருந்தால் அன்று ஆஜராகித் தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

G. K. ராமச்சந்திரய்யர்

புதுக்கோட்டை 18-2-56 } வாதி அட்வகேட்

## சேங்கோல் மடாலயம் தேவாரபாடசாலே

பெருங்குளம் 12-

செங்கோல் ம ட ம் ஆ தீ ன தேவார பாடசாலே மாதாந்தரக் கூட்டு வழிபாடு இன்று ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தரசத்தியஞான பர மாசாரிய சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது.

மாலே 6மேணிக்கு வ ழி பா டு இயற்றியபின் பி ரா ர் த்தனைக் கூட்டம் ஆரம்பித்தது. சுவாமி கள் தலைமையுரையில் அ நா தி மு த் த ஆ ன் ம ரெக்ஷகனுகிய முழுமுதற் கடவுளே அ னு தின மும் உள்ளும் புறமும் ஒ ன் ருய் வ ண ங் கிப் பிரார்த்தித்தல் நம் கடமை. அதற்குச் சமயப் ப ண் பாடு வேண்டும்.தேவாரப் பள்ளி களும் சமய சம்பந்தமான பாடங் கள் அமையும் பள்ளிகளும் நாட் டில் பெ ரு க வேண்டும் சமய உண்மைகளையும் இறைவன் தத் துவத்தின் பெ ரு மை களையும் குருகுலவாசத்தின்மூலம் புரிந்து கொள்ளாவிடில் சமயப்பண்பாடு அமைந்து மனம் ஒ ரு மை ப் படாது.

சுயநலமில்லாமை அன்புகாட் டுதல் தியாகம் இரக்கம் தருமம் செய்தல் பக்திவழிபாடு ஆகிய வற்றைக் கடைப்பிடித்துப் பேச் சும் மூச்சும் இறைவனைப் பற்றி என்று வந்துவிட்டால் இ றை வன் திருவருள் ந ம் மை ம ஆட் கொண்டு விடுகிறது. பிறப்பின் பயனும் அடைந்து விடுகிறோம். உங்கள் குழந்தைகளே இளமையி லேயே சமயக் கல்விபயில வசதி செய்யுங்கள்; ப ள் ளி ப் படிப்பு ஒன்றே இ ரு ந் தா ல் அ து போதும் என இருப்பது உ ண் மையான க ட மை செய்ததாக இராது. பின்னர் அ வ ர் களைக் குறைகூறிப் பயனில்லே. சமயத் தின் பிணைப்பு இளம் உள்ளத் திலேயே இடம் பெ ற் று வி ட வேண்டும் என வி ரி வாக எடுத் துக்கூறி அருளாசி மொ ழி ந் தார்கள்.

திருஞானசம்பந்த ஓ து வா மூர்த்தி சிவபுராணம் சொல்லக் கூட்டத்தினர் எழுந்து பாராய ணம் செய்தனர்- கற்பூர ஆரா தனை செய்து திருப்புகழ் பாடிப் பிரஸாதம் வ ழ ங் கியபின் கூட் டம் இனிது முடிந்தது.

## உபகாரச் சம்பளம்

முதலாவது ஐந்தாண்டுத்திட் டத்தின்கீழ் ச மூ க விஷயங்கள் பற்றிய ஆராய்ச்சிப்படிப்புக்காக இந்தியசர்க்கார் இதுவரைமொத் தம் 2,07,217 ரூபாய் உபகாரச் சம்பளங்கள் வழங்கியுள்ள ன ர்-

## தெரிந்து கொள்ளுங்கள்

அடுத்த ஐந்தாண்டுகளில், இந்தியாவில் சர்க்கரை உற்பத்தியை 25லட்சம்டன்னுகப்பெருக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது; தற்போது நாட்டில் 161 ஆலைகளின் மொத்த உற்பத்தி சக்தி 16லட்சம் டன்னுகும். புதிதாக 39 ஆலைகளை ஏற்படுத்துவதற்கும் ஏற்கெனவேயுள்ள 44 ஆலைகளை விஸ்தரிப்பதற்கும்லைசென்சுகள் வழங்கப்பட்டுள்ளன.

1951ம் ஆண்டிலிருந்து அம்மோனியம் சல்பேட் உரம் உற்பத்தி செய்துவரும் சிந்தரி ரசாயன உர உற்பத்திச்சாலை, நாட்டுக்கு 33கோடி ரூபாய் மதிப்புக்கு அன்னிய நாட்டுச் செலாவணியை மிச்சப்படுத்தியிருக்கிறது.

இந்தியசர்க்கார், இளம் கலைஞர்களின் கலாசாரப் பயிற்சிக்காக, இந்தவருஷம் மொத்தம் 28 உபகாரச்சம்பளங்களை வழங்குவார்கள். 1953ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட திட்டமொன்றின்கீழ், கலாசாரப் பயிற்சிக்காக இதுவரைமொத்தம் 72 பேருக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

குஷ்டரோகக் கட்டுப்பாட்டுக்காக, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்தம் 665 லட்சரூபாய் ஒதுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் செலவில் பாதியை மத்தியசர்க்காரும் பாக்கியை ராஜ்ய சர்க்கார்களும் ஏற்பார்கள்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் புதிதாக சுமார் 2000 தந்தி காரியாலயங்களையும் 1300 பொது உபயோக டெலிபோன்களையும் திறந்து வைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் மோட்டார் கார்கள் உற்பத்தி சதவிகிதம் பெருகியிருக்கிறது. 1955-ல் மொத்தம் 22,528 மோட்டார் கார்கள் உற்பத்தி செய்யப்பட்டன; 1954ல் உற்பத்தியான கார்களின்எண்ணிக்கை 14,462

நாட்டில் உள்ள 470 சப் டிவிஷனல் தலைமைக் காரியாலயங்களில் 325ல் டிரங்க் டெலிபோன் இணைப்புகளுடன் கூடிய பொது உபயோக டெலிபோன்கள் உள்ளன. மொத்தம் 1,180 தாசில் தலைமைக் காரியாலயங்களில்,

890ல் தந்திப் போக்குவரத்து வசதிகள் இருந்துவருகின்றன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சமுதாய அபிவிருத்தித் திட்டங்களுக்காக மொத்தம் 200 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டகால இறுதிக்குள்ளாக நாட்டில், பெரிய, சிறிய பாசனத் திட்டங்களின்மூலம் மொத்தம் சுமார் 1.7 கோடி ஏக்கரா நிலத்துக்குப் பாசனவசதி கிடைத்துவிடும் என்றுஎதிர்பார்க்கப்படுகிறது.

முந்திரிப் பருப்புப் பொருள்களின் ஏற்றுமதிமூலம் இந்தியாவுக்கு 12.8கோடி ரூபாய் வருமானம் கிடைக்கிறது. முந்திரிப் பொருள்களும், தேயிலையைப் போல அதிகமான வருமானம் சம்பாதித்துக்கொடுக்கும் இனமாகும்.

மத்திய சர்க்காரின்நிதி உதவி பெற்றுத்தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கான திட்டத்தின்கீழ் 1955 நவம்பர் மாதம் வரை. பல்வேறு ராஜ்யங்களில் 34,000க்கு மேற்பட்ட வீடுகள் கட்டப்பட்டன; இதற்காக இந்திய சர்க்கார் கடனாகவும், சகாயத்தொகையாகவும் மொத்தம் 21.69 கோடி ரூபாய் வழங்கினர்.

கோயம்புத்தூர்கரும்பு வளர்ப்புப் பண்ணையில் தயாரிக்கப்பட்ட புதிய கரும்பு ரகங்கள் இந்தியாவில் கரும்பு சாகுபடி செய்யப்படும் நிலப்பரப்பில் 95 சதவிகிதத்துக்கு அதிகமான பிரதேசத்தில் பயிர் செய்யப்பட்டு வருகின்றன. இவற்றில் சில ரகங்கள் தென்னாப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, க்யூபா, பிரிட்டிஷ், கயானா, ஜமேய்க்கா ஆகிய நாடுகளிலும் பயிரிடப்பட்டு வருகின்றன.

இந்தியாவில் வருஷத்துக்குச் சுமார் 800 டன் நாரத்தம்புல் தைலம் தயாராகிறது. இத்தைலத்தை உலக நாடுகளுக்கு சப்ளை செய்யும் பிரதான நாடு இந்தியாதான். இத்தைலம் சோப்பு, பௌடர் முதலிய வாசனை அலங்காரப் பொருள்களில் உள்ள பல வாசனைப் பொருள்களைத் தயாரிப்பதற்கு மூலப்பொருளாகப் பயன்பட்டு வருகிறது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் இதுவரை மொத்

தம் 27 பெரிய பாலங்கள் கட்டப் பட்டிருக்கின்றன. மேலும் 31 பாலங்கள் கட்டப்பட்டு வருகின்றன.

இதர நாடுகளில் ரயில்வேக்களின் வேலைமுறையில் ஏற்பட்டுள்ள புதிய முன்னேற்றங்கள் பற்றி அறிந்துகொள்வதற்காக, ரயில்வே மந்திரி காரியாலயம், மூன்று அங்கத்தினர்களைக் கொண்ட நிரந்தரக் கமிட்டி ஏற்படுத்தியுள்ளது,

முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் சுமார் 4,700 ரயில் பெட்டிகளிள், தயாரிக்கப்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. திட்டத்தில் நிர்ணயிக்கப்பட்பட்டுள்ள லக்ஷிய அளவைக் காட்டிலும் அது, 320 அதிகம் ஆகும்; பெட்டிகளில் பெரும் பகுதி இந்திய ரயில்வேத் தொழிற்சாலைகளிலும், ஹிந்துஸ்தான் விமானத் தொழிற்சாலைகளிலும் த்யாரிக்கப்பட்டு வருகின்றன.

தபால்-தந்தி இலாகாவின் தொழிற்சாலைகளில், 1955ம் ஆண்டில் மொத்தம் சுமார் 3.1 கோடி ரூபாய் மதிப்புள்ள ஸ்டோர்ஸ் சாமான்கள் உற்பத்திசெய்யப்பட்டன. 1947-ம் ஆண்டில் உற்பத்தியான ஸ்டோர்ஸ் சாமான்களின் மதிப்பு 1.36 கோடி ரூபாய்.

இந்தியாவில் உற்பத்தியான சைக்கிள்களின் மொத்த எண்ணிக்கை 1954ல் 3,72,365 ஆக இருந்தது, 1955ல் 4,80,000ஆக உயர்ந்துவிட்டது.

1951 மார்ச்சிலிருந்து 1956 ஜனவரி வரையுள்ள காலத்தில், இந்தியாவுக்குக் கிடைத்துள்ள வெளிநாட்டு உதவியின் மொத்த மதிப்பு 306,7 கோடி ரூபாய். இந்தத் தொகையில் 1446 கோடி ரூபாய். முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் முதல் நான்கு வருஷங்களில் செலவு செய்யப்பட்டிருக்கிறது. மேலும் 50கோடி ரூபாய்நடப்பு வருஷத்தில் செலவிடப்படும்; பாக்கித் தொகை இரண்டாவது திட்டகாலத்தில் செலவிடப்படும்.

---

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-20
மன்மத - மாசி-18
1-3-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## பாலை

### பிரிவுக் காலத்துத் தலைவி ஆற்றியிருப்பது கண்டுவியந்து தோழி மாறுபடக்கூறியது

நனிமிகப் பசந்து தோளுஞ் சாஅய்ப், பனிமலி கண்ணும் பண்டு போலா, இன்னுயி ரன்ன பிரிவருங் காதலர், நீத்து நீடின ரென்னும் புலவி, யுட்கோண் டுடின்று மிலையோ மடந்தை, யுவக்காண் டோன் றுவ வோங்கி வியப்புடை, யிரவலர் வருஉ மளவை யண்டிரன், புர வெதிர்ந்து தொகுத்த யானைபோல, வுலக முவப்ப வோதரும், வேறு பல் லுருவி னேர்தரு மழையே. 237 :—காரிக்கண்ணனார்

மடந்தையே! வியப்புடைய இரவலர் வரும்பொழுது அவர்களுக்குக் கொடுப்பதற்காக ஆய்அண்டிரன் சேர்த்து வைத்த யானைத்திரள்போல உலகத்துயிர்கள் மகிழும்படி சொல்லுதற்கரிய வெவ்வேறாகிய பற்பல உருவத்தோடு எழுகின்ற மேகங்கள் ஓங்கித் தோன்றுவனவற்றை உங்கே காண்பாயாக. மிக்மிகப் பசந்து தோளும் வாட்டமடைந்து நீர்வடிகின்ற கண்களும் முன்போலில்லாது இனிய உயிர்போன்ற பிரிதற்கரிய காதலர் கைவிட்டு நெடுந்தூரம் சென்றனரே யென்னும் புலவியைஉட்கொண்டு நீ ஊடுகின்ற தில்லையோ?

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்றிரடோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கி நின்று
ஊடுவேன் செவ்வாய்க் குருகுவே னுள்ளுருகித்
தேடுவேன் றேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வே னனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்கா ணம்மானாய் :திருவாசகம்

உரை:- 'பூங்கொன்றை சூடுவேன்-பொலிவாகிய கொன்றைப் பூ மாலையை அணிவேன், சூடி-அணிந்து, சிவன் - சிவபெருமானுடைய, திரள்தோள்-திரண்ட தோள்களை, கூடுவேன் -சேர்வேன், முயங்கி - புணர்ந்து, மயங்கி நின்று ஊடுவேன்-மயக்கத்தைக் கொண்டு ஊடுதலைச் செய்வேன், செவ்வாய்க்கு உருகுவேன்-அவனது சிவந்த வாயை நினைந்து உருகுவேன், உள்ளுருகித் தேடுவேன்-நெஞ்சுருகி அவனைத் தேடுவேன், தேடி - அவ்வாறு தேடி, சிவன் கழலே சிந்திப்பேன்-அச் சிவபெருமானது திருவடிகளையே சிந்தனை செய்வேன், வாடுவேன்-வாட்டமடைவேன், பேர்த்தும் - பின்னரும், மலர்வேன் - மகிழ்வை அடைவேன், அனல் ஏந்தி - நெருப்பைக்கையிலேஏந்தி, ஆடுவான்-நட்டமாடுபவனாகிய சிவபெருமானது, சேவடியே - திருவடியையே, பாடுதும்-யாம் புகழ்ந்து பாடுவோம், காண் அம்மானாய்- என்பதாகும்.

வாதவூரடிகளது மலர் வாய்ப் பிறந்த மணிவாசகத்தில், அகத்துறைப் பாடல்களும் உள்ளன. திருக்கோவையார் முழுவதும் அகத்துறைப் பொருளுடையதென்பது அனைவரும் அறிந்ததே. திருவாசகத்தில் அகவற் பகுதியை அடுத்து விளங்குவது திருச்சதகம். அது அந்தாதித் தொடையால் அமைந்த நூறு

திருப்பாடல்களைக் கொண்டதாய், இறைவனிடத்து வைத்த அன்பு விளைத்த பற்றறுதி, வியக்கத் தக்க பல வேறு நிலைகளை உண்டாக்க அந் நிலைகளை உணர்த்துவதாய் அமைந்துள்ளது. அதனால் இதனைப் பத்தி வைராக்கிய விசித்திரத்தை உணர்த்துவது என்று பெரியோர் கூறினர்.

பத்தி ஆண்டவன்பால் அடியார்கள் கொண்ட பற்றும், வைராக்கியம் அப்பற்றுக்கு இடையூறுயுள்ள உலகப் பற்றை வெறுத்தலும், விசித்திரம் பற்றற்றான் பற்றிற்காக மற்றைப் பற்றை விடுதலாகிய வியக்கத் தக்க தன்மையுமாம். இப்பகுதி மெய்யுணர்தலில் தொடங்கி ஆனந்தாநுபவத்தை விளக்கிக் கொண்டிருக்கிறது.

திருச்சதகத்தில் சிவானந்தாநுபவத்தைத் தெளிய வைத்த அடிகள், அதனையடுத்து அவ்வநுபவம் இடையீடு படாமல் இருப்பதற்கு உலகப்பற்று ஒட்டாதிருத்தல் வேண்டுமாதலால், அது ஒட்டாதிருப்பதற்கு இறைவனை வேண்டுகின்ற நீத்தல்விண்ணப்பத்தை அருளிச்செய்தார்- இப்பதிகக் குறிப்பு பிரபஞ்ச வைராக்கியம் என்பதாகும். பிரபஞ்சம் உலகமும் வைராக்கியம் அதனை வெறுத்தலுமாம்.

உலகப் பற்று ஒழிந்து சிவப் பற்று உண்டாதற்குத் துணை செய்வது சத்தியாதலின் நீத்தல் விண்ணப்பத்தை யடுத்துச் சத்தியை வியந்ததாகிய திருவெம்பாவை இடம்பெற்றது. பிரபஞ்சாநுக்கிரகத்திற்குச் சதாசிவ மூர்த்தியின் திருவருளால் மகேசுவரதத்துவத்தில் மனோன்மணிசத்தி மற்றைச் சத்திகளைப் பிரேரிப்பது, நூல்களிற் சொல்லப்பெறுவதாகும். இந்தக் குறிப்பைத் திருவெம்பாவை புலப்படுத்துகின்றது.

திருவெம்பாவையை அடுத்து இருப்பது திருவம்மானை. இதனை ஆனந்தக்களிப்பு என்று சொல்லுவர். சிவசத்தித்தொடர்பால் இன்புறுகின்ற உயிர், அவ்வின்பத்தை வழங்கிய ஆண்டவனது பெருமையைக் கூறுவது, இப்பகுதியில் காணப்பெறுவதாகும்

கலம்பகம் முதலிய தமிழ்ப் பிரபந்தங்களில் 'அம்மானை' என ஒரு உறுப்புக் காணப் பெறும். இது மூன்று பெண்கள் ஒருங்கே யிருந்து, ஒருத்திபாட்டுடைத் தலைவன் புகழை விறு

வாகப் பாட, மற்ெறாருத்தி அதற்கு விடையளிக்கும் முறையில் பாட, இன்னொருத்தி அதற்குக் காரணங்கூறும் முறையில் பாடுவதாய் அமைந்திருக்கும். ஆனால் அடிகள் பாடிய திருவம்மானை ஒருத்தியே பாடுவதாக அமைந்திருக்கிறது.

இப்பகுதி இருபது பாடல்களை உடையதாதலின், இருபது பெண்கள் கூடியிருந்து ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு பாடலாகப் பாடியதென்றும் சொல்லுவதுண்டு. திருவாசகவுண்மைகூற வந்த திருவாதவூரர் புராணம் 'நலமுறு மந்தணர் வடிவாய் நாரணன்காண் பரியபத, நிலமதில்வந் தாள்கருணை நினைந்தாட லம்மானை' என்று உரைத்தது.

திருவம்மானை முதற்பாடல் 'செங்கணெடுமாலும்சென்றிடந்தும் காண்பரிய பொங்குமலர்ப் பாதம்' என்று தொடங்கி 'அறைகூவி வீடருளும் அங்கருணை வார்கழல்' என்று முடிகின்றது. திருமாலுங் காண் பரிய சேவடி நிலந்தோய வந்து திருப்பெருந்துறையில் அடிகளை ஆட்கொண்ட பெருங்கருணைக்கு மகிழ்ந்து அடிகள் இறுதிப்பாடலில் 'சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் ருெல்புகழே, பற்றியிப் பாசத்தைப் பற்றற நாம் பற்றுவான், பற்றிய பேரானந்தம் பற்றுதுங்காணம்மானாய்' என்று அருளியுள்ளார். இதனால் ஆனந்தக்களிப்பு இது என்பது நன்கு உணரப்பெறும்.

அம்மானை என்பது பெண்கள் விளையாடும் விளையாட்டுக்களில் ஒன்று. மரத்தினால் பந்து போற் செய்யப்பெற்ற பொருளை வைத்துக்கொண்டு அதை உயர வீசித் தாளநடை பொருந்தப் பாடி விளையாடுவது இவ்விளையாட்டு. 'அம்மானைப் பாட்டயரும் கழுமலமே' என்பது ஆளுடையபிள்ளையார் தேவாரம்.

வாதவூரடிகள் திருவண்ணாமலையில் எழுந்தருளியிருந்தபொழுது ஒருநாள் சில கன்னிப்பெண்கள் தெருமுற்றத்திலிருந்து அம்மானை ஆடுதலைக் கண்டு அவர்கள் கூற்றாகஇதனை அருளிச்செய்தாரென்று அறிகின்றோம். ஊனாகியும் உயிராகியும் உணர்வாகியும்உட்கலந்து தேனும் அமுதமாயும் தீங்கரும்பின் கட்டியாயும் இன்புறுத்திய சிவபெருமானை அடிகள் புணர்ந்த புணர்ச்சி முறையை மேற்கண்ட பாடல் தெளிவுபடுத்துகின்றது.

இறைவனைத் தலைவனாகவும் தன்னைத் தலைவியாகவும் கொண்ட அடிகள், இப்பாடலில் மாலையணிந்தது, கூடியது, வருந்தி உருகியது, தேடியது, திருவடி சிந்தித்தது, வாடியது, மலர்ந்தது ஆகிய ஒன்பது நிகழ்ச்சிகளை உலகியலுக்கேற்ப உரைத்துள்ளார். குறிஞ்சிப் பொருளாகிய ஊடலும் நெய்தற் பொருளாகிய இரக்கமும் ஏற்பட்டதையும், பின்னர் முல்லைப் பொருளாகிய வாழ்வு உண்டானதையும் வெளிப்படையாகவும், வருந்தி உருகித்தேடியதில் பாலைப்பொருளாகிய பிரிவைக் குறிப்பாகவும் உணரவைத்துள்ளார் அடிகள்.

இறைவனை அடைந்து உயிர் இன்புறுதற்குச் சாதனமாயிருப்பன சரியை. கிரியை யோக ஞானங்கள். பூங்கொன்றை சூடுவேன் என்பதில் சரியை கிரியைகளும், சிவன் திரள்தோள் கூடுவேன்' என்பதில் யோகமும் 'கூடி முயங்கி' என்பதில் ஞானமும் உணர்த்தப்பெற்றன. யோகத்தாற் சார்ந்து ஞானத்தாற் கலத்தலே முயங்குதலாகும்.

மாயா சம்பந்தமான உடலோடுள்ள காரணத்தால் அம்முபக்சத்திலிருந்து ஒரோ வழிப் பிரிவு ஏற்படுவது இயல்பு. பிரிவாற்றாமை காரணத்தால் இறைவனைத் தேடுதலும் சிந்தித்தலும் மெலிதலும் நிகழும். 'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்'பது இறைவன் இயல்பாதலின் சிந்தனையின் பயனாக மீண்டும் அவனது கூட்டுறவு நிகழ அப்போது 'பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ' என்றபடி பேரின்பம் உண்டாகும். இவ்வாறெல்லாம் திருவிளையாடல் புரிகின்ற இறைவன் திருவடிகளைப்பாடி இன்புறுவது, இன்றியமையாததல்லவா?

## மூன்றும் வகுப்பு ஒழிக்கப்படும்

புதுடில்லி பிப் 23-

ஏர் கண்டிஷன் செய்யப்பட்ட பெட்டிகள் தவிர, மற்றபடி இரண்டே வகுப்புக்கள்தான் வைத்துக்கொள்ள வேண்டும் என்னும் ரயில்வேக்களின்கொள்கையை அனுசரித்து, 'தற்போதுள்ள மூன்றும்வகுப்பை ஒழித்துவிட்டு அதற்கு இரண்டாம் வகுப்பு என்று பெயர் வைத்து பிரத்தியேகமான இரண்டொரு பெட்டிகளில் நித்திரை வசதி செய்துகொடுப்பது தற்போதைய உத்தேசம்' என்று ரயில்வே மந்திரி ஸ்ரீ லால் பகதூர் கூறினர்.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

1300 ஆண்டுகளுக்கு முன்பே அரசன்முதல் ஆண்டிவரை வித்தியாசமின்றி ஆண்டவனை வழிபட வழிவகுத்தார். ஏழைகளுக்கு வேலைகொடு என்றார். ஏழைக்குக் குறைந்த கூலி ரூ 2-8-0 ஆக்கினர். இச் சம்பளம் வேறு எம்மதத்திலும் வரையறுக்கப்படவில்லை' (10-11-55 தமிழ்நாடு) என்றெல்லாம்அளக்கிறார். அத்தனையும் இசுலாத்தின் உயிர்நாடி. அதற்கும்அவர் சொன்ன சைவசமய உயிர்நாடிக்கும் வித்தியாசமில்லை. இசுலாமிய உயிர்நாடி சிறந்ததென்று கூடச்சொல்லலாம். அங்ஙனமாக அவர் 'எல்லா மக்களிடத்தும்—அன்பாக நடந்துகொள்பவனே சைவன்' என்றது ஏன்? அப்படி நடந்துகொள்பவனே இசுலாமியன், கிறிஸ்தவன் என்று சொன்னாலென்ன? நன்றாகச் சொல்லலாம். அன்புடைமை எச்சமயத்துக்கும் பொது. அன்றியும் 'மற்ற மதங்களில் கூறப்படும் கொள்கைகள் மிகச் சாதாரண"மானவை. பொய் சொல்லாதே,'அன்புடன்இரு என்பவைபோன்ற அந்தப்போதனைகள் நமது மதத்தினருக்கு அரிச்சுவடிப்பாடம் போன்றது.சாதாரண மனிதவாழ்விற்குத் தேவையானவற்றையே அவைகள் போதிக்கின்றன. அதற்கும் உயர்ந்த தன்மையுள்ள கடவுளுக்கும் நமக்கும் உள்ள தொடர்பைப்பற்றி அவை சிந்திக்கக் கூட இல்லை. நமது ஹிந்துமதத்தின் ஆரம்பமே கடவுளை மனிதன் அடைவதெப்படி யென்ற ஆரம்பத்துடன் இருக்கிறது' (10-9-55 தினமணி) என்கிறார் மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுரர் தேவஸ்தானத்தில் அப்போது நிர்வாக அதிகாரியாயிருந்த மேனன்- நவீனரானவருமே சைவமேடைகளில் சைவத்தின் உயிர்நாடியெனப் பெருமுழக்கமிட்டுப் பேசுவது அவ்வரிச்சுவடிப்பாடமே யாம். அது சைவத்தின் உயிர்நாடியாதலில்லை.

அவர் மற்றச் சமயங்களின் உயிர்நாடியை யெடுத்துக்காட்டுவர். அதில் அவர் கூடியவரை யோக்கியர்தான். 'முசுலீம்கள் சொல் கூறும் அல்லா என்ற ஆண்டவரைக் குறிக்கும்

அல்லா ஒருவரைத்தவிர வேறு தெய்வம் இல்லை; முகம்மதுதான் அவருடைய தீர்க்கதரிசி என்பது இசுலாமியச் சமயத்தின் அடிப்படை' (29-10-55) என்கிறு ரவர். அவ்வடிப்படை இசுலாத்துக்கே யுரியதென்பதை யாராலும் மறுக்க முடியாது. அத்தகையதோரடிப்படை சைலசமயத்துக்கு முண்டு. அதை அவர் எடுத்துக்காட்ட வேண்டும். அப்போதுதான் அவரது சைவப்பிரசாரம் நாணயமுடையதாகும். சைவ சமயிகள் கூறும் சிவன் என்ற சொல் முழு முதற் கடவுளைக் குறிக்கும். அச்சொல்லுக்குப் பொருள் மங்கலத்தைத் தருபவன் என்பது. எல்லா வுயிர்களுக்கும் இன்பந் தருபவனுகலின் அவனையே வழிபடுமாறு மக்களுக்கு உபதேசிக்குஞ் சமயந்தான் சைவம். அச்சிவனையல்லால் வேறு தெய்வமில்லை. இருக்காதி காமிகாதி வேத சிவாகமங்களே அவன் வாக்கு. அவை கூறுவன சரியையாதி பாதங்கள். அவற்றில் நின்றொழுகுவதே தவம். அத்தவமில்லார்க்கு அவனின்பமில்லை. சம்பந்தாதியோரும், மெய்கண்டார் முதலியோரும், சிவஞான முனிவரும் அச்சமயத்தை விளக்கிக்காட்ட வந்த ஆசாரிய புருஷர். அவ்வேதாகமங்கள் ஞான நூல்கள். அவை கூறும் உண்மையை அவ்வாசிரியர் தம் தவ முதிர்ச்சியால் அனுபவத்திற் கண்டனர். ஆகலின் அவராக்கிய தேவாராதிகள் அனுபவ நூல்கள். அந்த ஞானநூல்களும், அவற்றின் வழிவந்த அவ்வனுபவ நூல்களுமே அச்சமயப் பிரமாண நூல்கள். மேற்சொன்ன அத்தனையும் சைவசமயத்துக்கு அடிப்படை, உயிர்நாடி. அதை அங்கீகரித்து வாழ்பவனே சைவன். சைவத்துக்கு இவ்வடிப்படை சொல்வதுதான் நவீனர் இசுலாத்துக்கு அடிப்படை சொன்னதுபோலாகும். பதி பசு பாச வுண்மை, சிவபரத்வம், சிவதீக்ஷையின் முக்கியத்துவம், வேதாகமப் பிரமாணியம், மும்மலவியல், சரியையாதி மார்க்க ஆசரணம், சுத்தாத்துவித விளக்கம், சிவசின்ன மகிமை, சைவாசிரியன்மாரின் ஒப்புயர்வின்மை அவரருளிய நூல்களிற் பரந்து காணுஞ் சிவகந்தம், சிவாலயதரிசனவிதி, ஆலயங்களிலுள்ள மூர்த்திபேதங்களின் விஷயம், உத்ஸவவிரதாதிகளின் உட்கிடை, சிவபூசை சைவசமயத்தின் வரம்பைப்பாதுகாத்தலின் அவசியம் முதலியன பற்றிப் பிரமாண ரீதியாகச்செய்யப்படும் பிரசாரங்களே அவ்வுயிர்நாடியோ டியைந்தனவாம்.

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

மன்மத மாசி-18

## வரவுக்குச் செலவா? செலவுக்கு வரவா?

அந்நியர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்று எல்லா வகையான உரிமைகளுடனும் இப்பொழுது நாம் வாழ்ந்துகொண்டிருக்கின்றோமல்லவா? முடிமன்னர்கள் ஆட்சியைவிடக் குடிமன்னர்கள் ஆட்சி பெருநலந்தருவது என்று முன்பெல்லாம் கனவு கண்டுகொண்டிருந்து, இப்பொழுது அக்குடிமன்னர்ஆட்சி நலத்தை இடைவிடாது அநுபவித்துக்கொண்டிருக்கிற ஒவ்வொரு இந்தியனும், பாரபட்சம் பாராது தனது நெஞ்சைத் தொட்டுப் பார்த்துக்கொண்டு எந்த நாள் சிறந்ததென்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இந்தியநாட்டுப்பணம் அந்நியர்களால் கொள்ளையடித்துக் கொண்டு செல்லப்பெறுகிறதென்று சொல்லப்பெற்ற அந்த நாளிலே மக்கள் அநுபவித்துவந்த வாழ்வு வளத்தில் பத்தில் ஒருபங்குகூட இப்போது இல்லை என்பதை வருத்தத்தோடு சொல்லித்தான் ஆக வேண்டியதிருக்கிறது. அரசியலில் அங்கம்வகிக்கும் தலைவர்கள் அனைவரும் நாட்டின் வளத்தில் கண்ணுங்கருத்தும் உடையவர்களாய்த்தான் இருக்கிறார்கள். என்றாலும் அவ்வளத்தை உண்டாக்குவதற்காக அவர்கள்

போடுகின்ற திட்டங்களுக்குப் பொருள் சேர்க்கின்ற முறையிலும் அப் பொருளைச்செலவு செய்கின்ற பொழுது அனாவசியமாக ஏற்படுகின்ற விரயங்களைத் தடுக்கமுடியாமையிலுமாகப் பொதுமக்கள் வருந்தவேண்டிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்து விடுகின்றன.

அணிமையில் ஒரு தனிப்பட்ட செல்வர், ஒரு பள்ளிக்குக் கட்டிக் கொடுத்த கட்டிடத் திறப்புவிழாவிற்குத் தலைமை வகித்த ஒரு மாவட்டக்கழகத் தலைவர் 'இருபதினாயிரம் செலவு செய்து கட்டப்பெற்ற இக்கட்டிடம் எங்கள் மாவட்டக்கழகத்தின் மூலம் கட்டப்பட்டிருக்குமானால் நாற்பதினாயிரம் செலவாகியிருக்கும்' என்று சொன்னார். இதை நூற்றுக்கு நூறு உண்மை என்றுதான் நாமும் சொல்ல விரும்புகிறோம்.

செலவைத் திட்டம் செய்து கொண்டு வரவு தேடுகின்ற கொள்கையை, விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிற அரசாங்கத்தினிடமிருந்து மக்கள் ஒருகாலத்திலும் நன்மையை எதிர்பார்க்கவே முடியாது. மக்களை வளமுடையவர்களாக வாழும்படி விட்டுவைத்து அவர்களது வருவாயில் ஒரு கூற்றை வரியாக அரசாங்கம் வசூலித்தால் நியாயமாயிருக்கும்.

மக்களது வருவாயைப் பற்றிச் சிந்திக்காது அவர்களிடமிருக்கும் மூலதனத்திலேயேகண்ணோட்டங் கொண்டிருக்கும் அரசு,' நாளாவட்டத்தில் மக்களால் பெரிதும் வெறுக்கப்பெறுமென்பதுஉண்மை.

தொழில்களெல்லாவற்றையும் பொதுமக்களிடமிருந்து பிடுங்கிக் கொள்ள நினைப்பதும். புதுப்புது வரிகளைப்போட்டு அவர்களைத் துன்புறுத்துவதும் அவ்வளவு நல்ல செயல்களாகமாட்டா! எல்லா மக்களின் நல்வாழ்வையும் பற்றி ஒருசேரக் கருத வேண்டிய அரசாங்கம், ஏதோ ஒருசிலரின்நன்மையில்மட்டும் கவனஞ் செலுத்திச் செயல்புரிந்துவருகிறது. எல்லாம் இறைவன் செயலென்று இருப்பதன்றி நாமேன் செய்யவல்லேம்! வேலி, பயிரைக் காப்பதுதான் முறை.

## வரப்பெற்ருேம்

இட்டமொழிக்கிராம முன்சீப் திரு சிவசூரிய நாராயண பிள்ளை அவர்களால் சைவானுட்டானத்திற்கேற்பக் கணிக்கப் பெற்ற துன்முகி வருடக் கலைமகள்வாக்கியப்பஞ்சாங்கம். வெளியிட்டோர்: ஸ்ரீமகள் கம்பெனி, 122 வரதாமுத்தியப்பன் தெரு, சென்னை-1 விலை அணு எட்டு.

சிறந்த சோதிடக்கலை வல்லுநரான திரு, பிள்ளையவர்கள்மற்ற எல்லாப் பஞ்சாங்கங்களிலும் உள்ள விஷயங்களைவிட அதிகமான விஷயங்களைப் புலப்படுத்தி 129 தலைப்புகளில் சரியான கணனஞ் செய்து இதனை வெளியிட்டிருக்கிருர்கள். தேவி ஆருடம், இலங்கை மலேயா உற்சவாதிகள் இப் பஞ்சாங்கத்திலுள்ள சிறப்புவிஷயங்கள்.

## சிங்கப்பூர்

நாட்டுக்கோட்டைச் செட்டியார் வர்த்தக சங்கத்திற்கு 1956ம் ஆண்டிற்கு அடியிற்கண்டுள்ள உத்தியோகஸ்தர்களும் நிர்வாகசபை அங்கத்தினர்களும் 9-2-1956ல் நடைபெற்ற சங்க மகாசபைக்கூட்டத்தில் சங்க நிர்வாகத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தலைவர்: திரு, பெரி அ மு மாணிக்கம்செட்டியார், உப-தலைவர்: அரு அரு நாராயணன் செட்டியார், காரியதரிசி: பெரி ராம பழ காசிவிஸ்வனுதன்செட்டியார், உதவிக்காரியதரிசி: கரு தெ வேலாயுதம் செட்டியார், பொக்கிஷதார்: அரு சா அரு மெய்யப்பசெட்டியார், கணக்குப் பரிசோதகர்: லெ வி வினைதீர்த்தான் செட்டியார், நிர்வாகசபை அங்கத்தினர்கள்: ராம வீர ராமசாமி செட்டியார், முத்து கரு அரு பழ வெ செல்லப்ப செட்டியார், கண மா கண்ணப்ப செட்டியார், முப அ சொ கருப்பையா செட்டியார், மெ பழ மலையாண்டிசெட்டியார், வ சுப நாச்சியப்பசெட்டியார்

## திரு இரும்பூளை

திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகளின் பாடல் பெற்றதும் ஆலகால விஷத்தையுண்டுதேவர்களை ரக்ஷித்ததும், சுகப்ரும்மரிஷியால் துதிக்கப் பெற்றதும், அமிர்த புஷ்கரணியால் சூழப் பெற்றதுமான திரு இரும்பூளை என்னும் ஆலங்குடியில்

(8-3-56) வியாழக்கிழமை உத்திராட நக்ஷத்திரங்கூடிய சுப தினத்தில் காலே 8 மணிக்குமேல் 10மணிக்குள்ளாக மஹாந்யாஸ பூர்வமாய் அபிஷேக ஆராதனை களும், சுவாமிக்குப் பஞ்சமுக அர்ச்சனையும் ஸ்ரீ தெக்ஷிணா மூர்த்திக்கு விபூதி அபிஷேகமும் ஸ்ரீ வள்ளியம்மை தெய்வானையம்மை சமேத ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு ராஜாலங்காரமும் நடைபெறும். இரவு சைவ சமய உபந்யாசங்களும், சங்கீதக் கச்சேரிகளும் நிகழும். ஆலங்குடி: நீடாமங்கலத்திற்கு வடக்கே 4மைலில் உள்ளது.

## நான்கு புதிய வரிகள்

1956-57ம் ஆண்டுக்குரிய பற்றுக்குறை வரவு-செலவுத் திட்டத்தைச் சென்னை நிதியமைச்சர் திரு, சி சுப்பிரமணியம் சட்டசபையில் சமர்ப்பித்தார். புதிய வரவு செலவுத் திட்டப்படி அரசாங்க வருமானம் ரூ 59கோடியே 33 லட்சமாக இருக்குமென்றும், செலவு ரூ 62 கோடியே 44லட்சம் தொகையாக இருக்குமென்றும், இதன்படியே ரூ 3கோடியே 11 லட்சம் துண்டு விழுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

துண்டுவிழும் தொகையைஓரளவு சரிக்கட்டுவதற்காக 4புதிய வரிகளை விதிக்கச் சென்னை அரசாங்கம் உத்தேசித்துள்ளது. இவ்வரிகளின் மூலம் சுமார் ரூ 1.45கோடித் தொகை வசூலிக்கப்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

டீசல் எண்ணைமீது விதிக்கப் பட்டுவரும்வரி 'காலனுக்கு' ஒன்றரையணாவாயிருந்து வருவதை 4அணாவாக உயர்த்துதல், இதன் மூலம் ஆண்டுக்கு சுமார் ரூபாய் 30லட்சம்வருமானம்கிடைக்கும். சர்க்கரை விற்பனைமீது உசிதமானஒருமுனையில் ரூபாய்க்கு ஓரணா விற்பனைவரி கூடுதலாக வித்திதல் இதன்மூலம்ரூ40லட்சம்கிடைக்குமெனப்மதிப்பிடபடுகிறது.

மின்சாரப் பகுதிகளில் மின்சார சக்தியைப் பெருவாரியாகப் பயன் படுத்துகிறவர்களுக்கும், விநியோக உரிமையை மாற்றுவதற்கும் 30சதவீதம் கட்டணம் உயர்த்தப்படும். இதன்மூலம் 45 லட்சம்ரூபாய் வருமானம்கிடைக்கும்.

இனும் நிலங்கள்மீது ரயத்துவாரி கட்டணங்கள் விதிக்கப்படும். இதன்மூலமாக ரூ 30லட்சம் வருமானம் கிடைக்கும்.

## செங்கோல் ஆதீனக் குருபூசை

பெருங்குளம் திருக்கைலாய பரம்பரைத் திருச் செங்கோல் மடாலயத்தில் 100வது மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கல்யாணசுந்தரசத்தியஞான பரமாசாரிய சுவாமிகள் குருபூசை 19-2-56ல் நடைபெற்றது. அன்று காலை குருமூர்த்தம் திருக்கோயிலில் விசேட அபிடேகம் அலங்கார ஆராதனைகளும் மகேஸ்வர பூஜையும் ஏழைகளுக்கு அன்னமளிப்பும் நடைபெற்றன.

இரவு 100வது மகா சந்நிதானம் திருவுருவப் படத்திற்கு விசேட அலங்காரம் திருமடத்தில் செய்யப்பட்டுத் தேவார பாடசாலை மாணவ மாணவிகள் பஜனையும் சிவபுராணபாராயணமும் செய்யப்பட்டது. தற்போது பீடத்தில் இருந்து அருட் செங்கோல் செலுத்தும் 101ம் மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக சுந்தரசத்திய ஞானபரமாசாரிய சுவாமிகள், சிவ ஞானபோதம் பற்றியும் உருத்திராக்ஷம் பஞ்சாக்ஷரம் பற்றியும் விரிவாக எடுத்துரைத்து அருளாசி கூறினர்கள், திருஞானசம்பந்த ஓதுவாமூர்த்தி தீபாராதனை செய்து பிரசாதம் வழங்கினர்.

---

## கல்கத்தா

பேரறிஞர் திரு எஸ் வையாபுரிப் பிள்ளை அவர்களின் மறைவு குறித்து பாரதி தமிழ்ச் சங்கம் 19-2-56 மூடப்பட்டுமறு நாள் மாலை ஓர் அனுதாபக் கூட்டம் நடைபெற்றது.

ஸ்ரீ எஸ் வையாபுரிப் பிள்ளை தமிழுக்குச்செய்த அரும்பெரும் பணிகளையும் அவருடைய வாழ்க்கையைப் பற்றியும் ஸ்ரீ கே எஸ் கோவிந்தராஜன் பேசினர்.

தமிழ், வடமொழி, மலையாளம், ஆங்கிலம், ஜெர்மனி, பிரெஞ்சு முதலான மொழிகளில் சிறப்பான புலமை பெற்ற பன் மொழிச் செல்வர்என்றும் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பிள்ளை அவர்களின் தொண்டு மகத்தானது என்றும் ஸ்ரீ எஸ் குப்புஸ்வாமி குறிப்பிட்டார். அவருடைய மறைவு குறித்து அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. அவருடைய ஆன்மா சாந்தியடைய மௌனப் பிரார்த்தனை நடைபெற்றது.

# எடிஸன் அளித்தவை

இக்கால இயந்திர உலகம் பற்றிய கனவைநனவாக்கியவை பல நாட்டு விஞ்ஞானிகளின் திறமையும் உழைப்புமாகும். அவர்களுள் தாமஸ் ஆல்வா எடிஸனை விட மற்ற ஒருவருடையஉழைப்பும் உலகத்தில் விளங்கியதில்லை எனலாம். விஞ்ஞானப் புதுமைகள் பல கண்ட அந்த அமெரிக்கரது 109வது பிறந்தநாள் விழா இந்தமாதத் தொடக்கத்தில் கொண்டாடப்பட்டது.

எடிஸன் கண்ட விஞ்ஞானப் புதுமைகள் 1,100க்கும்அதிகம். அவற்றுள் போனகிராப் ஒன்று; இதனையே அவர் எல்லாவற்றுக்கும் மேலாக விரும்பினர்; மின்சாரஇழை இன்னொன்று; இதன் பொருட்டே பலரும் அவரை நினைக்கின்றனர்; பேசாதவையும் பேசுவனவும் ஆன இருவகைச் சலனப்படங்களும் கார்பன்டெலிபோன் டிரான்ஸ்மிட்டரும் மின் சாரரயில் வண்டியும் அவர் கண்ட புதுமைகளே.

இவையே போதும் அவரைப் புதியன காண்போர் முன்னணியில் நிறுத்த. ஆயினும் கார்ப்பி எடுக்கும் கருவி, நடைமுறைக் கொத்த முதலாவதுஒலிபெருக்கி குரல் பெருக்க இரும்புத் தாதுக்களைக் காந்தத்தால் தொகுத்தல், மின்காந்த பிரேக், நிக்கல் இரும்புக்கொள் மின்கலம் இவற்றையும் அன்றாட வாழ்க்கையில் அநேக துறைகளில் பயனாகும் எண்ணிறந்த கருவிகளையும் கண்டுபிடித்தவர் அவரே. எல்லாவற்றுக்கும் மேலாக அவர் கண்டுபிடித்தது ஒன்று உண்டு. அதுவே விஞ்ஞானப் புதுமைகளைக் கண்டுபிடிக்கும் கருவியாம் தற்காலத் தொழில் நுட்ப ஆராய்ச்சிக்கூடம்.

எடிஸன் கண்டுபிடித்வைகளுக்குக் கணக்கு வழக்கில்லை; ஆகவே அவரைப் பற்றிப் பல கதைகள் முளைத்தன. ஆனால் அவர் தாம்கண்டுபிடித்தபுதுமைகளுக்குச் சென்ற வழியும் கையாண்ட முறையும் கற்பனைக் கதையில் வருவன போன்றவையல்ல; அவை மிகவும் ஒழுங்கானவை, சாதாரணமானவை. அசாதாரணமான ஊக்கம் பெற்று உழைக்கும் மேதாவியை எடிஸன் மதிக்கவில்லை; 'மேதாவியை ஆக்குவது நூற்றுக்கு

இரண்டு பங்கு தான் அசாதாரண ஊக்கம், மற்ற 98 பங்கும் உழைப்புத்தான்' என்று அவர் அடிக்கடி கூறுவதிலிருந்துஇது தெளிவு. தோல்விகள் அவரை மேலும் மேலும் முயற்சி செய்யும்படி வெற்றியடையும் வரை தூண்டின.

1847ம் ஆண்டு பிப்ரவரி 11ம் தேதி ஓஹயோ ராஜ்யத்தில் மிலான் என்னும் இடத்தில் பிறந்தவர் அவர். அவர் பள்ளி சென்ற நாளெல்லாம் மூன்று மாதம் கூட ஆகாது. கல்வியில் அவருக்கு மீதமுள்ளதை அவர் தாயாரே பார்த்துக்கொண்டார். இளைஞர் எடிஸன் தமது பரிசோதனைக் கூடத்துக்கு வேண்டிய புத்தகங்களும் சாதனங்களும் வாங்குவதற்காக - அவசியமில்லாவிட்டாலும்–ரயில்வண்டிகளில் செய்தித்தாள்களும் தின்பண்டமும் விற்கலானர்,

கிடைத்த வாய்ப்பைவிடமாட்டார் எடிஸன் என்பதை ஒரு ரயில்வண்டியில் நடந்த செய்தியொன்று நன்கு விளக்கும். அந்த ரயிலில் ஒரு பெரியவர்; நன்றாக உடுத்திருந்தார்; சற்று தூங்க நினைத்தார்; தொந்தரவில்லாமல் தூங்கவேண்டி, எடிஸனைப்பார்த்து அவர் கையிலிருந்த பத்திரிகைகளையெல்லாம் தூர எறிந்துவிடும்படி சொல்லி அவை யாவற்றுக்கும் தாமே பணமும் கொடுத்துவிட்டார்

எடிஸனுக்கு இது எதிர்பாராத நல்ல சமயம்; உடனே தமது ரயில் பெட்டிக்கு ஓடினர்; அங்கேதான் அவர் விற்க வேண்டிய பத்திரிகைகள் இருந்தன; அங்கிருந்து சில சஞ்சிகைகளை எடுத்துக்கொண்டு திரும்ப வந்தார். மீண்டும் அம் மனிதர் அவற்றைத் தூர எறிந்துவிடச் சொல்லி அவற்றுக்குரியதொகையைக்கொடுத்தார். இப்படியே எடிஸன் தமது பத்திரிகைகள் அனைத்தையும் தீர்த்து முடிக்கும் வரை இந்த நாடகம் நடந்தது. கடைசியில் அந்த மனிதர் ‘இன்னும் ஏதாவது வைத்திருக்கிருயா?' என்று கேட்டார். ‘இல்லை; இருப்பதெல்லாம் வெற்றுக் கைப்பெட்டி ஒன்றுதான்' என்ருர் எடிஸன். ‘அதையும் கொண்டுவந்து போடு' என்று கட்டளையிட்டார் பெரியவர். இவ்வாருக அதிருஷ்டவசத்தால் அகப்பட்ட பணம் மின்சார விஞ்ஞானத்தைப் பற்றிக் கவலையோடு படிப்பதற்கு வேண்டிய புத்தகங்களை வாங்குவதற்கு என்கிருர் எடிஸன்.

மின்சார விளக்குக் குமிழ் பற்றி எடிஸன் பரிசோதனைகள் நடத்துகையில், புது உண்மை ஒன்றைக் கண்டார்; அதுவும் புரட்சிகரமான சமூக மாறுதல்களை உண்டுபண்ண விருந்தது. அவர் கண்டுபிடித்த அந்த உண்மைக்கு 'எடிஸன் சித்தி' என்று பெயர். ரேடியோ டியூப் இதன் பயனாக ஏற்பட்டதாகும். மின்சார இழைக்கும் தகட்டுக்கும் இடையேயுள்ள வாக்குவத்தின் வழியே மின்சார ஓட்டம் ஒரு திசையதாக இருக்கும் என்பதே 'எடிஸன் சித்தி'. இதுஒரு பயனும் இன்றி ஓர் இருபது ஆண்டுகள் உறங்கிக் கிடந்தது; பின்னர் வேறு விஞ்ஞானிகள் அதனைப் பயன் படுத்தலானார்கள்; அதனால் தோன்றியதே தற்கால எலக்டிரானிக் டியூப். இதுவே வானொலி, நெடுந் தொலைவு டெலிபோன், எக்ஸ்ரே, உயர் அலை அடுக்க சிகிச்சை, எலக்டிரானிக் சங்கீத வாத்தியங்கள் முதலிய பல்வேறு காரியங்களுக்கு அடிப்படையாகியுள்ளது.

1928ல் விஞ்ஞானச் சித்தர் எடிஸனுக்கு அமெரிக்கக் காங்கிரஸ் விசேஷப் பதக்கம் ஒன்று வழங்கியது. பல பல்கலைக்கழகங்கள் கௌரவப்பட்டங்கள் வழங்கின. அமெரிக்கத் தேசிய விஞ்ஞானக் கழகத்திலும் அவர் உறுப்பினரானார். பிரெஞ்சு லீஜன்ஆப் ஹானரும் அவரைத் தளபதி எனக் கௌரவித்தது. பிரிட்டனிலுள்ள கலைக் கழகம் அவருக்கு ஆல்பர்ட் பதக்கம் அளித்தது. அமெரிக்க என்ஜினியரிங் சங்கங்கள் அவருக்கு ஜான் பிரிட்ஸ் என்ஜினியரிங் பதக்கம் வழங்கின. 1914ல் ரத்தனோ (ஜெர்மன்) பதக்கம் அவருக்குக் கிடைத்தது.

அவர் இறந்தது 1931 அக்டோபர் 18. அதற்குள் அவர் பேட்டன்ட் செய்திருந்தவை 1,100க்கும் அதிகம். அமெரிக்கப் பேட்டன்ட் அலுவலகம் இத்தனை உரிமைப் பதிவுகளை வேறொருவருக்கும் என்றும் வழங்கியதில்லை.

2,000 கோடி டாலர் பெறுமானமுள்ள தொழில்கள் எடிஸனால் தோன்றியவையே ஆகும் என்று 1947ல் மிகக் குறைந்த மதிப்பு ஒன்று கூறுகிறது. அவற்றில்வேலைசெய்வோர் 40,00,000 பேராவர். எடிஸன் கண்டுபிடித்தவைகளால் நேரடியாகத் தோன்றுவிட்டாலும்விஞ்ஞானத்துறையில் அவர் ஆற்றிய தொண்டு இல்லையானால்

தோன்றியிருக்க இயலாத தொழில்களையும் சேர்த்தால், இந்தஎண்ணிக்கை இன்னும் கோடியாகிவிடும்.

---

## தெரிந்து கொள்ளுங்கள்

இந்தியா சுதந்திரம் பெற்றதி லிருந்து, இதுவரை, பாசன வசதி மின்சாரத் திட்டங்களுக் காக மொத்தம் 809 கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டிருக்கி றது. பிரிட்டிஷ் ஆட்சியில் இத் தகைய திட்டங்களுக்குச் செல வழிக்கப்பட்ட தொகையைக் காட்டிலும் அதுநான்கு மடங் காகும்-

முதலாவது ஐந்தாண்டுத் திட்டகால இறுதியில், நாட்டில் நபர் விகித மின்சார உபயோகம் 25 யூனிட்டுகளாக அதிகரித்து விடும். 1952ம் ஆண்டில் நபர் விகித உபயோகம் 14 யூனிட்டு கள்தான். 1961ம் ஆண்டுக்குள் ளாக அது 50 யூனிட்டுகளாக அதிகரித்துவிடுமென்றும் எதிர் பார்க்கப்படுகிறது.

வேலை பூர்த்தியான எஃகு உற்பத்தி 1954ல் 12,43,467 டன்னாக இருந்தது. 1955ல் 12,62,782 டன்னாகப் பெருகி விட்டது.

பூனாவுக்கருகே பிம்பிரியி லுள்ள பெனிசிலின் உற்பத்தி சாலையின் உற்பத்தி சக்தி தற் போது வருஷத்துக்கு 80 லட் சம் மெகா யூனிட்டுகளாக இருந்துவருகிறது. இதற்கு ஐந் தாண்டுத் திட்டத்தில் நிர்ண யிக்கப்பட்ட லட்சியஅளவு வரு ஷத்துக்கு 48லட்சம் 'மெகா யூனிட்டுகள்' ஆகும்.

முதலாவது ஐந்தாண்டுத் திட்ட கால இறுதிக்குள்ளாக 45,600 குட்ஸ் வாகன்களுக்கு அதிகமாக உற்பத்தி செய்யப்படு மென்று எதிர்பார்க்கப் படுகி றது. அதற்கான திட்ட லட்சிய அளவு 30,000 வாகன்கள் ஆகும்.

இந்தியாவில் மொத்தம் 2.2 லட்சம் ஏக்கரா நிலத்தில் முந் திரி சாகுபடி செய்யப்பட்டு வரு கிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-21
மன்மத - மாசி-25
8-3-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## முல்லை

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் குறித்த பருவம் வந்தும் வராமையால் தலைவி மேகத்தை நோக்கி அழிந்து கூறியது.

வறங்கொல வீந்த கானத்துக் குறும்பூங், கோதை மகளிர் குழூஉநிரை கடுப்ப, வண்டுவாய் திறப்ப விண்ட பிடவ, மாலை யந்தி மாலதர் நண்ணிய, பருவஞ் செய்த கருவி மாமழை, யவர்நிலை யறிமோ வீங்கென வருதல், சான்றோர்ப் புரைவதோ வன்றே மான்றுட, னுரவுரு முரறு நீரிற் பரந்த, பாம்புபை மழுங்க லன்றியு மாண்ட, கனியா நெஞ்சத் தானு, மினிய வல்லநின் னிடிநவில் குரலே 238 :கந்தரத்தனார்

கோடைவெப்பத்தால் கெட்டுப்பட்ட காட்டிலே, சிறிய பூவணிந்த கூந்தலையுடைய பெண்கள் கூடுகின்ற கூட்டம்போல் வண்டுகள் வாய்திறந்து தேனைப் பருகும்படி மலர்ந்த பிடவுகளையுடைய அந்திமாலையில் யான் காமநோய் கொள்ளும்படி கார்ப்பருவத்தைச் செய்த தொகுதியாகிய கரிய மேகமே! நீ அவர் நிலைமையை இங்கு நான் சொல்ல அறிந்துகொள்வாயாக என்று வருதல் சான்றோர் செய்கையை ஒத்ததாகமாட்டாது. ஒருசேரமயங்கி உனதுஇடித்து முழங்கும் தொழிலையுடைய குரல் வலிய இடியாக முழங்குவதனால் பரந்த பாம்புகள் படமழுங்கி யடங்கச் செய்வதன்றி மாட்சியுடைய தலைவரது நெஞ்சம் கனியும்படிசெய் யவல்லனவல்லவாதலால்உனது இடித்து முழங்கும் குரல் எனக்கு இனிமை செய்வனவல்ல.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

கற்றவளை தனக்குமுண வளிக்குமுன்றன் கருணைநிலை தனையறியேன் கடையே னிங்கே, யெற்றவளை யெறும்பேபோற் றிரிந்து நாளு மிளைத்து நின தருள்காணு தேந்தா யந்தோ, பேற்றவளைக் காணுத பிள்ளை போலப் பேதுறுகின் றேன்செய்யும் பிழையை நோக்கி, யி ற் ற வளைக் கேள்விடல்போல் விடுதி யேல்யா னேன்செய்வே னெங்குறுவே னேன் சொல்வேனே. :– மகாதேவ மாலை. 81

உரை: 'எந்தாய் - எமது அம்மையப்பரே, கல் தவளை தனக்கும் - கல்லினுள்ளே யிருக்கின்ற தவளைக்குக்கூட, உணவு அளிக்கும்-உணவு கொடுக்கின்ற, உன்றன் கருணை நிலை தனை- உனது அருளியல்பினை. அறியேன் - நான் தெரிந்துகொள்ள மாட்டேன், கடையேன்-கீழ்மைக் குணமுடையவனுகிய நான், இங்கே-இவ்வுலகத்திலே, எற்ற-மற்றவர்களை ஏமாற்ற, வளை-வளையிலே வாழுகின்ற, எறும்பே போல் - எறும்பைப் போல,திரிந்து- அலைந்துதிரிந்து, நாளும் இளைத்து - நாடோறும் மெலிந்து, நினது அருள் காணுது-உனது திருவருளைஅறியாது, அந்தோ-ஐயோ, பெற்றவளைக்காணுத -பெற்ற தாயைக் காணுத, பிள்ளை போல - பிள்ளையைப்போல, பேதுறுகின்றேன்- மயங்குகின்றேன், செய்யும் பிழையை நோக்கி-நான் செய்கின்ற பிழையைக்கருதி, இற்றவளை-மனையாளை, கேள் விடல் போல்-கணவன் விட்டொழிப்பதுபோல, விடுதியேல் - விடுவாயானல், யான்-நான், என் செய்வேன்-என்ன செய்வேன், எங்கு உறுவேன்-எங்கே செல்லுவேன் என்சொல்வேன்-என்னசொல்லுவேன்' என்பதாகும்.

செந்தமிழ்ச் சுவை மலிந்த தெய்வப் பொலிவுடைய பாடல்கள் பலவற்றை யாத்துத் தந்தவர் இராமலிங்க அடிகள். பத்தொன்பதாம் நாற்றுண்டில் தோன்றித் தமிழகத்தில் வாழ்ந்து, சைவசமய உண்மைக

ளைப் பல வழிகளில் நிலைநாட்டிய பாவலரும், நாவலருமாகிய பெருமக்களில் இராமலிங்க அடிகள் பலராலும் பாராட்டப் பெறுபவர்.

அடிகளது வாழ்க்கை முறையும் வாக்கு நயமும் கண்டாரைக்கவரும் கவினுடையனவாய் விளங்கின. காலத்திற்கேற்ற எளியநடையில் அரிய பொருள்களை இனிய முறையில் எடுத்துக்கூறுவதால், இவரது பாடல்களைப் படிப்போரின் தொகை இன்று நாட்டிலேபெருகிக்கொண்டு வருகின்றது. இவர் வாழ்ந்த நாளில் இவரது எளிய வாழ்க்கையையும், உலகியற் போக போக்கியங்களில் விருப்பமில்லாதிருந்த மனநிலையையும் உள்ளத்தை ஒளிக்காது வெளிப்படுத்தும் சொற்பாங்கையும் கண்டு இவரிடத்து ஈடுபட்ட பெரியோர் பலரென்று அறிகின்றோம்.

அடிகளைச் சமரசவாதி என்று சொல்லி 'எம்மதமும் சம்மதம்' என்ற கொள்கையுடையவரெனக் கருதுபவர் தொகை மிகுதியாகக் காணப்பெறுகிறது. அவரது பாடல்களை ஊன்றிப் படித்தால் அவரைப்பற்றிப் பலர் நினைக்கிறபடி. அவர் அனைத்து மதங்களையும் ஒரே தகுதியுடையனவென்றும் அனைத்துத் தெய்வங்களையும் ஒரே தன்மையுடையனவென்றும் கருதினரென்று முடிவு செய்ய இடமில்லை.

எல்லா மதங்களிலும்உண்மை உள்ளன எனவும் சைவ சமயமொன்றே முடிந்த முடிபான உண்மையை உடையதெனவும், எல்லாக் கடவுளரும் வணக்கத்திற்குரியவரெனவும், சிவபெருமானொருவரே முதற் கடவுளெனவும் உணர்த்துவது அவரது பாடல்களின் பொதுப் பொருளென்று சொல்லலாம். சமயகுரவரையும் மற்றைத் திருத்தொண்டரையும் இடைவிடாது எண்ணியெண்ணி ஏத்துகின்ற இயல்பை இவரது பாடல்களின்மூலம் நாம் நன்கு அறிகின்றோம்.

'யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையவன்' ஆண்டவன் என்பதை ஆன்றோர் சென்ற நெறிபற்றி உணர்ந்து தனது கீழ்மையை அவனிடம் புலப்படுத்தித் தன்னை ஆட்கொண்டருளும்படி பல பாடல்களில் இவர் வேண்டிக்கொள்ளுகின்றார். நமது அநுபவத்திற்கு வரும் அத்தனை நிகழ்ச்சிகளு

ஆண்டவனது அருள் விளக்கத்தை வெளிமுகமாகவோமறைமுகமாகவோ புலப்படுத்துவனதா மென்றாலும், அந்நிகழ்ச்சிகளின் உள்ளீட்டை உண்மையாக உணர்ந்துகொள்ளவோ, அவ்வாறு உணர்ந்து கொண்டதைப் பிறருக்கு உணர்த்தவோ நாம் முற்படுவதில்லை.

தன்னலம் ஒன்றை மட்டும் கருதாது மற்றவரும் தம்மைப் போல இன்புறுதல் வேண்டுமென்று நினைந்து உண்மையை உணர்த்துபவர் சான்றோரென்று அனைவராலும் மதிக்கப்பெறுவர். பெறுதற் கரிய தொரு பெரும்பேற்றைப் பெறவேண்டுமென்றால். அதற்காகச் சிறிதளவு உழைப்பெடுத்துக்கொள்ளுவதற்கும், சிறிய இன்பங்கள் சிலவற்றை விட்டுக்கொடுப்பதற்கும் பின்வாங்குதல் கூடாது. சிவப்பேற்றை அடைவதென்பது எளிதான காரியமல்ல, அதனைப் பெறுவதைக் குறிக்கோளாகக் கொள்ளும்பொழுது, உலக இன்பங்களை நுகருவதிலிருந்து ஒருசார் ஒதுங்கியிருப்பது இன்றியமையாததாகும்.

உயிர்கள் பாசத் தொடர்பை அநாதியே பெற்றிருப்பதால், அப்பாச சம்பந்தமான பொருள்களில் அவைகட்கு உண்டாகும் பற்று எளிதில் விட்டு நீங்காது-ஒன்றைப் பற்றியன்றி இருக்கப் பழகாததும் முடியாததுமான உயிருக்கு நல்ல பற்றை உண்டாக்குவது, அல்லாதபற்றை அகற்றுவதற்கு வழியாகும். ‘பற்றுக பற்றற்றான் பற்றினையப் பற்றைப், பற்றுக பற்று விடற்கு’ என்பது திருக்குறள்’

கடவுட் பற்று ஒன்றை யன்றி மற்றைப் பற்றுக்கள் அனைத்தும் தீமையோ அன்றித்தீமைக் கலப்போ உள்ளனதாமென்பதை அநுபவமுடையார் அறிவர். கடவுள் ஒருவரே நன்மையுருவினராக-உயிர்களின் நன்மைகுறித்த அருள் நோக்க முடையவராக இருப்பவரென்பதை அறிந்த பொழுதுதான், அவர்பாற் பற்று வைத்தொழுகும் முயற்சியை மேற்கொள்ள முடியும்.

கடவுள் உயிர்களிடத்துவைத்துள்ள பெருங்கருணையால் அவ்வுயிர்கள் தம்மை நினைந்தாலும் நினையாதொழிந்தாலும், வாழ்த்தினாலும் வைதாலும் அவைகளுக்கு வேண்டிய உதவிகளை இடைவிடாது செய்துகொண்டு தானிருக்கிறார். ஆண்டவனது அளவில்லாத பெருங்கருணைத் திறத்தை அறிந்துகொள்வதற்கு

உலகத்திற் பிறந்து உலவுகின்ற உயிர்களுக்கு மட்டுமன்றிக் கருப்பையினுள் இருக்கின்ற முட்டைக்கும் கல்லினுள்ளே இருக்கின்ற தேரைக்கும் உணவூட்டி வளர்க்கின்ற உதவியை உளங்கொள்ளுவதே போதுமானதாகும்.

எனவேதான் அடிகள் முதல் வரியில் 'கற்றவளே தனக்கும் உணவளிக்கும் உன்றன் கருணையில்' என்று கூறினர். கடையேன் என்ற சொல், மற்றை எந்தத் துறைத் தலைவனுயிருந்தாலும் கடவுள் நினைவில்லாதவனுயின் அவன் கடையவனே என்பதைத் தெளிவாகப் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது. கடவுட் கருணையை யெண்ணுதவரனைவரும் கடையவர் கூட்டத்தில் வைக்கப்பெறவேண்டியவரென்பதைத் தன்மை நிலைச் சொல்லாற் சாதுரியமாக அடிகள் பெறவைத்துள்ளார்.

தன் முயற்சியின்றிப் பிறர் முயற்சிப் பயனைக் கொள்ளை கொள்பவர் எற்றர் என்றும் ஏமாற்றுபவர் என்றும் குறிக்கப் பெறுவர். இரவு பகலாக இங்கு மங்கும் ஊர்ந்துசென்று உணவு சேகரிப்பது எறும்புகளின் செயல், பிறர் முயற்சியில் வந்த பொருள்களைத் தனக்கு உணவாக்கிக் கொள்ளப் பெரும்பாடு படுகின்ற எறும்பை, எற்றருக்கு உவமை கூறியது எவ்வளவு அழகாயிருக்கிறது?

உடம்புக்கு இரைதேடி உயிர் வாழப் பிறந்தது எறும்பு. உயிருக்கு இரைதேடிஉடல் வாழப் பிறந்தவன் மனிதன். எனவே எறும்புபோல் அலைந்துதிரிந்தாலும் மனிதன் குறித்தபயனைப்பெருமையால் இளைப்பை எய்துகின்ருன். அவ்விளைப்பு ஆண்டவனருளைப் பெற்ருலன்றி நீங்காது.

அருள், இறைவனது சத்தியாகும். 'அருளது சத்தியாகும் அரன்தனக்கு' என்பதுசிவஞான சித்தியார். ஆகவேதான் எமது தாயே எனவும் எம் தந்தையே எனவும் பொருள் தருகின்ற 'எந்தாய்' என்ற விளிச் சொல்லை அடிகள் இங்கே வைத்தார். பிறிதோரிடத்தில் 'தந்தையும் தாயும் பொடித்திருமேனி அம்பலத்தாடும் புனிதன் நீ' என்று இவ்வாசிரியரே கூறியுள்ளார்.

பெற்றவளைக் காணுத பிள்ளை, அவளைக் கண்டு அடைய எவ்வளவு அவாவுகின்றதோ; அவ்வ

(12ம் பக்கம்பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

நவீனரின் சைவத்துக்கு அவ்வுயிர்(நாடி) இல்லை. மேனன் கூறிய அரிச்சுவடிப்பாடமே அதற்குயிர். அதன் துடிப்பு அறுபட்ட வால் துடிக்கும் அளவினதே.

'சமணமும் பௌத்தமும் இந்நாட்டில் செல்வாக்குப் பெறலாயின. இவ்விரு சமயத்தவரும் பொதுமக்களுக்குக் கல்வியும் மருத்துவமும் உதவினர். எல்லா மக்களையும் ஒரு தாயின்றபிள்ளைகள்ளாகக் கருதினர். தமிழ்ச் சமுதாயத்தில் சாதி வேறுபாடுகளால் அல்லலுற்ற மக்கள் பலர், இச்சமயத்தவர் புரிந்த கல்வி மருத்துவ உதவிகளைப்பாராட்டி இச்சமயங்களைத் தழுவினர். இத்தழுவலால், சைவமும் வைணவமும் வலிமையும் செல்வாக்கும் குறைந்து காணப்பட்டன' (28-6-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். சமணமும் பௌத்தமும் நாத்திகங்கள். அவை பொதுமக்களுக்குச் சேவைசெய்தனவா? சரி. சைவத்தை விட்ட திருநாவுக்கரசர் சமணரேயானார், பௌத்தராகவில்லை. ஏன்? அம்மட்டோ? அவர் பௌத்தரை வாதில் வெல்லவுஞ் செய்தார். அது வேண்டுமா? அங்ஙனம் அவர் தாபித்த சமணப்பகுதி எது? நிராகரித்த பௌத்தப்பகுதி எது? அவ்விரண்டுமே அவ்வச் சமயங்களின் அடிப்படையென்பதை நவீனரறிக. சமூகசேவை அவ்வாத விஷயங்களிற் சேராது. அது எல்லாச் சமயங்களுக்கும் பொது; தமிழகத்தில் தோன்றுதொட்டு எல்லாச் சமயத்தாருஞ் செய்துவருவது. ஒருவரைப்பார்த்து ஒருவர் அச்சேவைசெய்யக் கற்றாரென்பது முழுமடமை. திருநாவுக்கரசர் மாபெருஞ் செல்வர். சமணர் செய்த சமூக சேவையில் அவர் மதிமயங்கி அச்சமயத்துக்குப் போகவில்லை. நம் பருளாமையினால் அச்சமயத்தின் அடிப்படையே மேலானதெனக் கண்டார், அதிற் சென்றார் அவர். அப்படிச்செல்பவரே அச்சமயத்தின் மெய்ப் பயனைப் பெறுவார். 'சமயத்துறையின் அடிப்படை உண்மைகளை நன்கு

கற்று, உணர்ந்து, செயற்படுத்தி னல்தான் அந்நிலையை அடைய முடியும்' (29-10-55 தமிழ் நாடு) என்கிருர் நவினரும், அத னைவிட்டுச் சோறு, துணி, மருந்து, கல்வி, கல்யாணம் முத லிய உடற்சுகத்துக்கு ஆசைப் பட்டுச் சமயம் மாறுவது மானங் கெட்டசெயல். உயிர்நலஞ் சருது பவன் தன் உயிர் போவதாயி னும் அது செய்யமாட்டான். ஒவ்வொரு சமயத்து மக்க ளுள்ளும் பிச்சைக்காரர், அங்க ஹீனர், பிணியர், மூடர் முதலி யோர் பல்லாயிரவருளர். நவீ னர் கூறும் சமூகசேவை இலௌ கிகம். அதைச் செய்து, ஒரு சம யத்தார் அந்நிய சமயத்தவரைத் தம் சமயத்துக் கிழுக்கவும், அவ் வந்நிய சமயத்தார் தம் சமயத்த வரை அச்சமயத்துச்குப்போகாத படி தடுத்து நிறுத்தவும் முற்படு தல் வெட்கக்கேடான காரியம். அம்முறையை மெச்சுபவரும் வெட்கங் கெட்டவரே. அவ்விரு திறச் சமயத்தவரும் அச்சேவை யால் பிறிதொரு நோக்கத்தைச் சாதித்துச்கொள்ள விரும்புகின் றனர். அவர் நேர்மையான சேவகரல்லர்; கள்ள வுள்ளத்தி னரே. சைவ சமயம் அப்படி வளர விரும்பவில்லை. அதன் அடிப்படைக் கொள்கைகள் பற் றிய பிரசாரங்களே அதன் வளர்ச்சிக்குரிய நேரிய வாயில். சம்பந்தரும், வாகீசரும், வாசக ரும் சைவத்தைப் பாடசாலை, மருத்துவநிலையம், பிரசவவிடுதி, அநாதை ஆசிரமம் முதலியன அமைத்துச் சமூகசேவைசெய்து மீட்கவில்லை. அந்நேரிய வாயி லொன்றனே மீட்டனர். சமூக சேவையால் வளர்ந்தன எனப் பட்ட சமண பௌத்தங்கள் தொலைந்தன.

சமூகசேவை தனிப்பட்ட கௌரவமுடையது. பணம் படிப்பு, பட்டம், பதவி முதலி யன பெற்றுப் பாக்கியவான்க ளாயினூர் பலர். அவற்றல் அவர் நெஞ்சு இறுகக்கூடும். அந்நெஞ்சு இளகிக் குழைய வேண்டும். இன்றேல் அவருயிர் உய்தி பெறுது. அதுகுறைக் தால் அவர் தம் பாக்கியத்தைக் கொண்டு சமூகசேவை செய்வர். சமூகசேவை செய்துசெய்து பழ கினல் அவர்நெஞ்சு குழையும். ஆகவே அச்சேவை அவரது நலத்திற்காகவே உளதாயிற் றென்க. ஏழைகளுக்காகஎன்பது அடுத்தபடிதான். அச் சேவையைச் செய்பவருள்ளும் ஏற்பவருள்ளும் சாதி சமய பேதம் பாராட்டற்கவசிய மில்லை.

(தொடரும்)

உ

சிவமயம்

பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத மாசி 25

## மகா சிவராத்திரி

அநாதி காலந் தொடங்கி ஆணவ இருளில் மூழ்கி அறியாமையிற் கிடந்துழலும் உயிர்கள், ஆண்டவன் அருளைப் பெற்றாலன்றி முற்று முடிந்த இன்பப்பேற்றை அடைய முடியாது. இதை யெண்ணித்தான் 'நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை, என்றுஞ் சிவன்றளிணை' என்று பெரியோர் கூறினர்.

இறைவழிபாட்டுக்கென ஏதோ ஒருசில பொழுதுகள் கூறப்பெற்றுள்ளனவேனும், அப்பொழுதுகள் மட்டுந்தான் அதற்குரியனவென்று கொள்ளுதல் பொருந்தாது 'இருக்கினு நிற்கும் போது மிரவுகண்டுயிலும் போதும், பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியூண் அயிலும் போது, முருக்கிளர் கனிவாயாரை முயங்கிநெஞ்சழியும் போதுந், திருக்களா வுடைய நம்பா சிந்தையுன் பாலதாமே' என்பது அதிவீரராமபாண்டியர் திருவாக்கு.

இடையீடின்றி இறைவனை நினைவது பெரியோர் இயல்பு. உலகியல் வாழ்வு, இறையியல் வாழ்வுக்குச் சாதனமாயிருத்தல்வேண்டுமென்பதைப் பெரும்பாலோர் நினைப்பதில்லை. அதனாலேயே உண்பதற்கும், உடுப்பதற்குமாதியவற்றிற்கே உழைப்பெடுத்துக்கொண்டு உயிர் உடலைப்பிரிந்த பிறகு வருவதாகிய

எதிர்கால வாழ்வைப்பற்றி எள்ளளவுஞ் சிந்திக்காது பொழுது கழிக்கின்ருர்கள்.

உடம்பு இருக்கிற பொழுதே அதனுற் பெறவேண்டிய முடிந்த பயனைப்பெற முயலாதவர்களின் வாழ்வு, வாழ்வாக மாட்டாது. 'வருமுன்னர்க்காவதான் வாழ்க்கை எரிமுன்னர், வைத்தூறு போலக்கெடும்' என்பார் திருவள்ளுவர். இடையீடின்றி இறைவனை யெண்ணி வழிபடவேண்டுங் கடமையுடைய மக்களின் அறியாமைக்கு இரங்கியஆண்டவன், சிற்சில பொழுதுகளைச் சிறந்தன வென்று குறித்து, அப்பொழுதுகளில் நியமமாக வழிபாடு செய்கின்றவர்களுக்கு அளவற்ற பயன் கிடைக்கத்தக்க நியதியையும் ஆக்கிவைத்துள்ளான்.

அவ்வாறுள்ள சிறப்பு நாட்கள் பல, ஆண்டுதோறும் வந்துகொண்டுதானிருக்கின்றன. ஆனுல் அந்த நல்லநாட்களிலுங்கூட உடல் வளர்ந்தேடும் உழைப்பை ஒதுக்கிவைத்துவிட்டு உயிர்வளந் தேடும் உழைப்பை மேற்கொள்ளுகின்றவர்களின் எண்ணிக்கை மிகுதியாகக் காணப்பெறவில்லை. ஒவ்வொரு மாதத்திலும் அமாவாசைக்கு முன்னேவரும் சதுர்த்தசி நாளைச் சிவராத்திரி நன்னுளாகக் கொண்டாடுவார்கள்.

மற்ற மாதத்துச் சிவராத்திரிகளைவிட, மாசிமாதத்துச் சிவராத்திரி சிறந்தது. பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான், ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுக் கொள்ளுகின்ற அருவமும் அருவுருவமும் உருவமுமாகியமூவகைத்திருமேனிகளுள், அருவுருவத் திருமேனிசிவலிங்கமாகும்.

இச்சிவலிங்க வுருவத்தைச் சிவபெருமான் கொண்டநாள் மகாசிவராத்திரி நாளும், பொழுது இரண்டாவது யாமபூசை நிகழுகின்ற நடு இரவுமாகும். அதனுல் இவ்வேளையை இலிங் கோற்பவ காலமென்று சொல்லுவார்கள்.

தன்னியல்பில் இருந்த சிவம், உயிர்களின் பொருட்டாக அவற்றின் நலங்கருதி வெளிவந்து அருள் புரிகின்ற நல்லநாள் சிவராத்திரி நாளென்பதை நினைவுகூர்ந்து **10-3-56** ஆகிய அந்நாளில் அப்பெருமானை மனமொழி மெய்களால் வழிபட வேண்டுவது நமது கடமையல்லவா?

## சங்கீத வாத்தியாலயம்

புதுடில்லி பிப் 16-

சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா சென்னையில் சங்கீத வாத்தியாலயத்தை இன்று ஆரம்பித்து வைத்தார்.

சங்கீத வாத்தியாலயம் இந்தியாவின் பரம்பரை வாத்தியங்கள் தயாரிப்பில் பயிற்சியளிக்கும் நிலையமாகும். அகில இந்திய கைநுட்பத்தொழில் போர்டின் யோசனையின்பேரில் இந்நிலையம் இவ்வருஷம் ஜனவரி மாதத்தில் ஏற்படுத்தப்பட்டது.

சங்கீத வாத்தியங்கள் தயாரிப்பது ஒரு பண்டைய கலையாகும். ஆனால் பொருளாதார நெருக்கடியினாலும் இதர காரணங்களினாலும் அது க்ஷீண தசையை அடைந்திருக்கிறது. எனவே அதற்குப் புத்துயிர் கொடுக்கும்பொருட்டு சங்கீத வாத்தியாலயத்தை ஏற்படுத்துவதற்காக இந்திய சர்க்கார் போர்டுக்கு சகாயத் தொகையாக 52,000 ரூபாய் வழங்கினர்.

வாத்தியாலயத்தில் இந்திய சங்கீத வாத்தியங்களை விஞ்ஞான முறைப்படி தயாரிப்பதற்குப் பயிற்சி அளிக்கப்படும். ஓரளவு சங்கீத ஞானமும் சங்கீத வாத்தியங்களின் தயாரிப்பில் ஆர்வமும் உள்ள மாணவர்கள் ஒருசிலர் தெரிந்தெடுக்கப்பட்டு அவர்களுக்குச் சங்கீத வாத்தியங்களைத் தயாரிப்பதில் பயிற்சியளிக்கப்படும். இப்பயிற்சி ஒருவருஷ காலத்துக்கு அளிக்கப்படும். முதல் வருஷத்துக்கு 20மாணவர்கள் தெரிந்தெடுக்கப்பட்டு உபகாரச் சம்பளங்கள் வழங்கப்பட்டுள்ளனர்.

முதலாவது ஆண்டில் வீணை, தம்புரா, கோட்டுவாத்தியம், நாதஸ்வரம், புல்லாங்குழல், சஞ்சிரா, மிருதங்கம், தவுல், ஜால்ரா, சிப்ளாக்கட்டை ஆகியவை தயாரிக்கப்படும்.

வட இந்தியாவிலும் இது போன்றதொரு வாத்தியாலயத்தை ஏற்படுத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

## அதிகாரி மாற்றம்

சிவகெங்கை பிப் 26-

இவ்வூர் பஞ்சாயத்து நிர்வாக அதிகாரி திரு எஸ் கந்தசாமி பள்ளத்தூருக்கு மாற்றப்பட்டு அங்குள்ள திரு, சேதுராமன் இவ்வூர் பஞ்சாயத்து நிர்வாக அதிகாரியாக 17ந்தேதி வேலையை ஒப்புக்கொண்டிருக்கிறார்.

## காசிவாசி சுவாமிகள் அருளுரை

மதுரை பிப் 27.

'காலமுண்டாகவேகாதல்செய்யும்அடியவர்க்கு மூலபண்டாரம் வழங்கும் நம் பாண்டிப் பிரானுகிய ஆலவாய்ச் சொக்கர், யார் யார் என்னென்ன வேண்டுமெனச் சிந்திக்கிருர்களோ அவர்க்கு எல்லாம் கிடைக்கச் செய்கிருர். வேண்டுவார் வேண்டுவதனைத்தும் தரும்அவர்பேரருளை அறியாமல் சிலர் வறுமையில் உழல்கின்றனர்- அடியவர்க்கு மூலபண்டாரம் வழங்குகின்ருன் வந்து முந்துமினே என்று மாணிக்கவாசகப் பெருந்தகை அலறிப்பாடி நம்மையெல்லாம் அழைத்தபடி வந்து வணங்கி ஆலவாய்ச் சொக்கர் திருவருளுக்குப் பாத்திரமாவோமாக' என்று இன்று மதுரை மீனுட்சிகோவில் பன்னிரு திருமுறை மன்றத்தில் அடியார்கட்கு வழங்கிய ஆசியுரையில்திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அருளினுர்கள். இவ்வறிவுரையைக் கூறிவிட்டு மாணிக்கவாசகப்பெருந்தகையருளிய காலமுண்டாகவேகாதல் செய்துய்மின் என்னும் பாடல் முழுவதையும் இசை பெருகத் தப் பாடினுர்கள். சைவமும் தமிழும் தழைக்க[நாடு முழுவதும் பல அறக்கட்டளைகளை நிறுவி வரும் சுவாமிகள் தமது தென்னுட்டுத் தலயாத்திரையில் இன்று பிற்பகல் மதுரை வந்து திருப்பரங்குன்றம் சுவாமி தரிசனமும் செய்துகொண்டு வரும் வழியில் பன்னிருதிருமுறை மன்றத்தார் வேண்டுகோட் கிணங்க அங்கு எழுந்தருளி உரை நல்கினுர்கள். சுவாமிகள் திருப்புகழ் சபைக்கு அழைத்துச்செல்லப்பட்டு அங்கு உரையாற்றும்போது அருணகிரியார் மானுடச் சட்டை தாங்கிய ஒவ்வொருவரும் படிக்க வேண்டிய 1030 திருப்புகழ்ப் பாடலைப்பாடியதாகவும் யாவரும் எளிதில் படித்தறிய வேண்டும் என்ற கருணை நோக்குடன் ஸ்ரீ குமாகுருபரசுவாமிகள் 122கண்ணியில் கந்தர் கலிவெண்பாவைப்பாடியதாகவும் அப் பெருமான் பூமேவுஎன்றுஆரம்பித்து அருள் என்று முடித்த அக் கலி வெண்பாவைப் படித்தோர் கலி நீங்குமென்றும் தினந்தோறுமோ சுக்ரவாரந்தோறுமோ அதை யாவரும் படிக்க வேண்டுமென்றும் கூறினுர்கள்.

( 5ம் பக்கத் தொடர்ச்சி )

ளவு அவாவுடையவர்களாக ஆண்டவனைக் கண்டு அடைய மக்கள் முயலுதல் வேண்டும். அம்முயற்சியில் சீவ சுவபாவத்தால் ஏதேனும் பிழைகள் நேருமானால் ஆண்டவன் அவற்றை மன்னித்து அருள் செய்வான்.

இற்றவள் என்பது இல்-தவள் என்று பிரிந்து, மனைத்தவத்தை யுடையவளென்று பொருள் தந்து, அறவாழ்வைப் புலப்படுத்தி அஃதுடையவளை எதனாலும் கணவன் விடுதல் கூடாததுபோல என்னையும் புறக்கணித்தல் தகாதென்ற வேண்டுகோள் மிகச்சிறந்ததல்லவா?

## மெய்கண்டார் கழகம்

தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க் காஞ்சியில் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் அடியார்களுக்கு உடையொலித்துக்கொடுத்துத் திருத்தொண்டுசெய்து முத்தியடைந்த முத்தீசப்பெருமான் திருக்கோயிலில் 26-2-56 ஞாயிறு காலை 1061வது வாரவழிபாடு சிவஞானபோதக் கூட்டுப் பிரார்த்தனையுடன் நன்கு நடைபெற்றது. தேவார பாராயணத்துக் குழுவின் கழகச் செயலாளர் திருஞானசம்பந்த முதலியார் திருக்குறிப்புத் தொண்ட நாயனார்புராணம் பற்றிச் சொற்பொழிவாற்றினார். இவ்வழிபாட்டைப் பெரும் பொருட் செலவில் நடத்திக்கொடுத்த திரு. என் பி பாலசுந்தர முதலியாரவர்கள் நன்றிகூறக் கூட்டம் இனிது முடிந்தது. 500க்கு மேற்பட்ட அன்பர்கள் தாய்மார்கள் மாணவர்கள் கலந்து வழிபட்டனர்.

## இந்தியக் கோவில்கள்

சென்னை மார்ச் 2-

இந்துக்களின் வாழ்க்கையிலும் தத்துவங்களிலும் கோயில்கள் பெரும் பங்குகள் கொண்டிருக்கின்றன என்று பிரிட்டன் குழுவில் நேற்று மாலை கூட்டுப் பொதுப் பழஞ்சின்னத் தலைமை அதிகாரி திரு டி என் இராமச்சந்திரன் பேசுகையில் கூறினர்.

'கோயில்கள் வேத காலத்திற்கு முன்னிருந்தே இருக்கின்றன. அவை மிகவும் தொன்மை வாய்ந்தவை இறந்தவர்களுக்காக ஸ்தூபங்கள் கட்டப்பட்டன. கோயில் கட்டும் வழக்கம் புத்தமத காலத்திலும் தொடர்ந்தது. மதத்தில் கோயில்கள்

முக்கிய இடம்பெற்றன. நாட்டில் புகழ் பெற்ற கோவில்கள் கட்டப்பட்டன.

பிரிட்டன் குழுவைச் சேர்ந்த எஸ் கே டிஸ்ட் அனைவரையும் வரவேற்றார். பேசப்பட்ட பொருள் தென்னிந்திய க் கோவில் என்பது.

## கல்கத்தா

25-2-56 'கல்கி துணை' ஆசிரியர் ஸ்ரீ ஜயமணி சுப்பிரமணியம், சுதேசமித்திரன் உதவி ஆசிரியர் ஸ்ரீ வி சீனிவாசன், 'நவ இந்தியா' ஆசிரியர் ஸ்ரீ ஆர் நாகபூஷணம் ஆகியோருக்கு கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்தில் வரவேற்பு அளிக்கப்பட்டது. சங்கத்தின் முன்னாள் தலைவர் ஸ்ரீ அரு சொக்கலிங்கம் அனைவரையும் வரவேற்று வங்கத்தில் சங்கம் ஆற்றிவரும் பணிகளைத் தனது தலைமையுரையில் குறிப்பிட்டார்.

வரவேற்புக்குப் பதில் அளிக்கையில் ஸ்ரீ ஜயமணிசுப்பிரமணியம் சங்கத்தின் தமிழ்ப் பணிகளைப் பாராட்டினார். சீனிவாசன் தங்கள் சுற்றுப் பிரயாணத்தைப் பற்றிக் கூறினார்-

ஸ்ரீ ஆர் நாகபூஷணம் தமிழ் மக்கள் பல்வேறு திட்டங்களில் பங்குகொண்டு தேச முன்னேற்றத்துக்குப் பணி புரிவதைப் பாராட்டினார். செயலாளர் குப்புஸ்வாமி நன்றிகூறக் கூட்டம் இனிது முடிந்தது.

## நோட்டீஸ்

சிவகங்கை டி மு கோர்ட்டு
1956ஆ O, P. No 10

ஆ க மு லெ மீனாக்ஷி ஆச்சி
—மனுதார்கள்

மனுதார்கள் ஷெயார்கள் புருஷன் லேட் ஆ க மு லெ லெட்சுமணன்செட்டியார் பேரா லுள்ள கெவர்ன்மெண்ட் ஆப் இந்தியா பிராம்சேரி நோட்டுக்களுக்கும் போஸ்டாபீஸ் நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுக்கும் புதுக்கோட்டை M CT M பியாங்க் லிமிடெட்டில் டிபாசிட்டாக உள்ள தொகைக்கும் தங்களுக்கு வார்சு சர்ட்டிபிகேட் கொடுக்கவேணுமாய் மனுச்செய்து 15-3-56க்கு வாயிதாப் போட்டிருக்கிறது.

ஆர். ராமானுஜம்

சிவகங்கை } மனுதார்கள்
29-2-56 } அட்வகேட்

## உங்களுக்குத் தெரியுமா?

பௌத்த ஜயந்தி விழாவில் கலந்துகொள்ளும் யாத்ரீகர்களின் சௌகரியத்துக்காக பௌத்த யாத்திரை ஸ்தலங்களுக்குச் செல்லும் ரஸ்தாக்களை அபிவிருத்திசெய்யும் பொருட்டு, உத்தர பிரதேச சர்க்காருக்கு இந்திய சர்க்கார் இதுவரை மொத்தம் 62.95 லட்ச ரூபாய் வழங்கியுள்ளனர்.

இந்தியாவில் மில்துணி உற்பத்தி 1954ல் 499.77 கோடி கெஜமாக இருந்தது, 1955ல் 504 64கோடி கெஜமாகப்பெருகி விட்டது.

இந்தியாவில் நிலக்கரி உற்பத்தி தற்போது 3.7கோடி டன்னாக இருப்பதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 6.0 கோடி டன்னாகப்பெருக்குவதென உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

பி ஸி ஜி மருந்து குத்தும் ஏற்பாட்டுக்காக 1955-56ம் ஆண்டு இறுதிவரை மொத்தம் 143-87 லட்ச ரூபாய் செலவழிக்கப்பட்டிருக்கிறது. இதில் இந்திய சர்க்கார் 22.06 லட்ச ரூபாயும் ராஜ்யசர்க்கார்கள் 121.81 லட்ச ரூபாயும் செலவிட்டுள்ளனர்.

இந்திய விவசாய ஆராய்ச்சிக் கௌன்சில், விவசாய கால்நடை வளர்ப்பு ஆராய்ச்சித் திட்டங்களுக்காக அடுத்த மூன்று வருஷ காலத்துக்கு மொத்தம் 212 லட்ச ரூபாய் அனுமதியளித்துள்ளது.

இந்தியாவில் சோப்புஉற்பத்தி 1955ல் மொத்தம் 94,000 டன்னாக இருந்தது; அது 1954ம் ஆண்டின் உற்பத்தியைக் காட்டிலும் 6,000டன் அதிகமாகும்.

பனைத் தயாரிப்புப் பொருள்களின் ஏற்றுமதிகளின் மூலம் இந்தியாவுக்கு வருஷந்தோறும் 90லட்ச ரூபாய் வருமானமாகக் கிடைக்கிறது.

சித்தரஞ்சன் ரயில் எஞ்சின் தொழிற்சாலை, முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் 337 ரயில் எஞ்சின்களைத் தயாரித்தது. இதற்கு அத்திட்டத்தில் நிர்ணயிக்கப்பட்ட லட்சிய உற்பத்தி அளவு 268 எஞ்சின்கள் தான்.

இந்தியாவில் கைத்தறித் துணி உற்பத்தி, 1954ல் மொத்தம் 132.0 கோடி கெஜமாக இருந்தது, 1955ல் 145.0கோடி கெஜமாகப் பெருகிவிட்டது.

இந்திய விவசாய ஆராய்ச்சிக் கௌன்சில் 1955-56ல்விவசாயம் கால்நடைவளர்ப்பு, மிருகவைத்தியம் ஆகியவை சம்பந்தமாக மொத்தம் 138 ஆராய்ச்சித் திட்டங்களைத் துவக்கி வைத்தது. அவற்றிற்கான செலவு மொத்தம் 64.61லட்ச ரூபாய்.

வேலை பூர்த்தியான எஃகின் உற்பத்தி அளவு தற்போது 13 லட்சம் டன்னாக இருந்து வருவதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் 43 லட்சம் டன்னாகப் பெருக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

கூட்டுறவு அடிப்படையில் வேலை செய்துவரும் கைத்தறிகளின் மொத்த எண்ணிக்கை 1953 செப்டம்பரில் 6 82 லட்சமாக இருந்தது 1955 செப்டம்பரில் 9 60லட்சமாகப்பெருகி விட்டது.

மொத்தம் 145கோடி கெஜம் கைத்தறித்துணி சென்ற ஆண்டில் உற்பத்தி செய்யப்பட்டது.

பெரிய துறைமுகங்களின்அபிவிருத்திக்காக 40கோடி ரூபாயும் சிறு துறைமுகங்களின்அபிவிருத்திக்காக 5கோடி ரூபாயும் இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஆதாரக்கல்வி அபிவிருத்திக்காக இந்தியசர்க்கார் நடப்புநிதி வருஷத்தில் ராஜ்ய சர்க்கார்களுக்கு மொத்தம் 30,34,902 ரூபாய் வழங்கியிருக்கின்றனர்.

## நோட்டீஸ்

சிவகெங்கை டிமு கோர்ட்டு
O. P, No 13 of 1956

மைனர் RM P S S சாத்தப்பன் அடுத்த சிநேகிதரும் ஜனகபிதாவுமான RM S ராமசாமி செட்டியார் —மனுதார்

லேட் RM P S S வள்ளியம்மைஆச்சிக்கு வர வேண்டிய தொகைக்கு ஷெியார் சுவீகார மகன் மனுதார் வார்சு சர்ட்டிபிகேட் பெற மனுக் கொடுத்து 14-3-1956 வாயிதா. ஆட்சேபணையை ஷெ உமுற்பகல் 10 மணிக்கு ஷெகோர்ட்டில் தெரிவித்துக்கொள்ளலாம்.

எஸ். வெங்கிடேஸ்வரன்

சிவகங்கை } மனுதார்
24-2-56 } அட்வகேட்

இந்திய ரயில்வேக்களுக்கு முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 30,000 வாகன்கள் உற்பத்தி செய்ய உத்தேசித்திருந்த போதிலும் திட்டகால இறுதிக்குள் சுமார் 45,600 வாகன்கள் உற்பத்தி செய்யப்பட்டு விடுமென்று தோன்றுகிறது.

1955ம் ஆண்டில் 504.64 கோடி கெஜம் துணி இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டது.

நிலக்கரி உற்பத்தி தற்போது வருஷத்துக்கு 3.7 கோடி டன்னாக இருப்பது இரண்டாவது திட்டகால இறுதியில் 6 கோடி டன்னாக அதிகரித்துவிடும்.

கடந்த ஆண்டில் 10.8 லட்சம் டன் சணல் இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டது.

கொழும்புத் திட்டத்தின்கீழ் இந்தியாவிலிருந்து 14 நிபுணர்கள் வெளிநாடுகளுக்குச் சென்றுள்ளனர். இந்தியாவில் கல்வி பயில வெளிநாட்டு மாணவர்கள் 340பேருக்கு இந்தியா உபகாரச்சம்பளம் வழங்கியிருக்கிறது.

கிழக்குப்பாக்கிஸ்தானிலிருந்து மேற்குப் பாக்கிஸ்தானிலிருந்தும் இடம் பெயர்ந்து வந்தவர்களில் வறுமை நிலையில் உள்ள க்ஷயரோக வியாதியஸ்தர்களுக்கு இலவசமாகச் சிகிச்சையளிப்பதற்காக மத்திய சர்க்கார் நாட்டில் உள்ள பல்வேறு ஆஸ்பத்திரிகளில் மொத்தம் 750 படுக்கைகளை ஒதுக்கியுள்ளனர்.

ஆரஞ்சுப் பழரசத்தூள் தயாரிப்பதற்குப் புதிய செய்முறையொன்று மைசூரில் உள்ள மத்திய உணவுத் தொழில் நுட்ப ஆராய்ச்சிக் கழகத்தில் உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்த முறையில் தயாரிக்கப்படும் பழரசத்தூள்களில், 'சி' வைட்டமின் சேர்த்து வலுவூட்டி இனிப்புள்ள ஆரஞ்சுப் பழரசபானங்களைத் தயாரிப்பதற்கு அவற்றைப் பயன்படுத்தலாம்.

கொழும்புத் திட்டத்தின்கீழ் இந்தியா சென்றவருஷம் ஜூன் மாதம் வரை பல்வேறு நாடுகளுக்கு 14நிபுணர்களையும், மாணவர்களின் பயிற்சிக்காக 340 உபகாரச் சம்பளங்களையும் கொடுத்துதவியிருக்கிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-22
மன்மத - பங்குனி-2
15-3-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## நெய்தல்

களவொழுக்கத்தில் தலைவன் சிறைப்புறத்தேயிருப்பதை அறிந்த தோழி, அவன் கேட்டு விரைந்து வரைந்துகொள் ளுமாற்றால் நொந்து கூறியது

ஞான்ற ஞாயிறு குடமலை மறைய, மான்ற மாலை மகிழ்ந்த பரதவ, ரினி
துபெறு பெருமீ னெளிதினின் மாறி, யலவ ணுடிய புலவுமணன் முன்
றிற், காமர் சிறுகுடிச் சென்னெறி வழியி, ஞெய்மணி போதியவிழ்ந்
தாங்கு நெய்தற், புல்லிதழ் போதிந்த பூத்தப மிதிக்கு, மல்ல லிருங்கழி
மலிநீர்ச் சேர்ப்பற், கமைந்துதோழில் கேட்டன்றே விலமே முன்கை,
வார்சோ லெல்வளை யுடைய வாங்கி, முயங்கெனக் கலுழ்ந்த விவ்வூ,
ரெற்று வதுகோல்யா மற்றேன்று செயினே 239 :குன்றியனார்

சாய்ந்த கதிரவன் மேற்கு மலையில் மறைய மயங்கிய மாலைக் காலத்தில் மகிழ்ந்த பரதவர்கள், வருத்தமின்றிப் பெற்ற பெரிய மீனை எளிதாக விற்று நண்டுவிளையாடிய புலவுநாற்றத்தையுடைய மணல் முன்றிலுள்ள அழகிய சிறிய குடியில் செல்லுற்ற ஒழுங்குபட்ட வழியில் அழகிய நீலமணிக் குவியலை விரித்துப் பரப்பினாற் போல நெய்தலின் புறவிதழால் மூடப்பட்ட மலரைக் கெடும்படி மிதிக்கின்ற வளமிக்க கரிய கழிகளையுடைய நீர்மலிந்த நெய்தல் நிலத் தலைவனுக்கு மனமொத்து அவனிட்ட தொழிலைக் கேட்டோமில்லை உனது முன்கையிலணிந்த நெடிய கோற்றொழிலமைந்த ஒள்ளிய வளைகள் உடையும்படி அச்சேர்ப்பனை அழைத்துமுயங்குக வெனப் புலம்பிய இவ்வூர் நாம் மற்றொன்றைச் செய்தால் என்ன பாடுபடுமோ?

:பாலகவி



# தண்ணீர்ப் பந்தல்

செல்வி,
வயிநாகரம் இராம. மீனுட்சி

திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடாலயத்தில், 14-3-56-ல் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் விழாவில்பேசியது,

சிவநெறிச் செல்வர்களே,

செல்விகளே!

வணக்கம்.

இந்தப் பெருவிழாவில் அடியேன் பேச வேண்டுமென்று ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள்கட்டளையிட்டபொருள் 'தண்ணீர்ப்பந்தல்' என்பதாகும். பசுபுண்ணியங்கள் முப்பத்திரண்டினுள் தண்ணீர்ப்பந்தல் வைப்பதும் ஒன்று. அப்பர் அடிகளிடத்தில், அவரைக் காண்பதற்கு முன்னமே அளவுகடந்த பற்று வைத்து, அப்பூதி அடிகள் செய்துவந்த அறச்செயல்கள் பலவற்றுள், அடிகளை அவரிடம் தொடர்பு படுத்தி வைத்தது, தண்ணீர்ப்பந்தலே ஆகும். இச்சிறப்பைத் திருவுளத்துக் கொண்டுதான், நமது காசிவாசி சுவாமிகள் அவர்கள் பல இடங்களில் புனற்பந்தல்நிதி வழங்கியுள்ளார்கள். அங்கயற்கண்ணி பங்கனுகிய ஆலவாய்ச் சொக்கேசப்பெருமான் மதுரைப்பதியில் உயிர்களை உய்விக்கத் திருவுளங்கொண்டு செய்த திருவிளையாடல்கள் அறுபத்து நான்கு ஆகும்.

அவற்றுள் தண்ணீர்ப்பந்தல் வைத்த திருவிளையாடலும் ஒன்று. இதனைச் செல்விநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பியும்

பரஞ்சோதி முனிவரும் இனிய தமிழ்ப் பாடல்களில் அமைத்து வழங்கியிருக்கிறார்கள். மதுரை நகரில் இருந்து கொண்டு பாண்டியநாட்டை ஆண்ட மன்னர்களுள் இராஜேந்திர பாண்டியனும் ஒருவன். அவன் காலத்தில் காஞ்சிபுரத்தில் இருந்து கொண்டு சோழநாட்டை ஆண்டவன் காடுவெட்டிய சோழன். அவனுக்கு மதுரைச் சொக்கேசரது வழிபாட்டில் பெரிதும் விருப்பமிருந்தது. அதற்காக இராஜேந்திர பாண்டியனது நட்பை அடைய விரும்பி அவனுக்குக் கையுறைப் பொருள்கள் பலவற்றைஅவன் அனுப்பினான். பாண்டியனும் சோழன் நட்பில் மனங்கொள்ள, இருவர் தொடர்பும் வலுப்பெறுவதாயிற்று.

பாண்டியனது குணநலம் முதலியவற்றை நேரில் கண்டறிந்த சோழன், தன் மகளை அவனுக்கு மணம் செய்து கொடுக்க உறுதிசெய்தான்.

இதனை அறிந்த இராஜேந்திரனது தம்பியும் எத்தகைய பழிச்செயலுக்கும் அஞ்சாதவனுமாகிய இராஜசிம்மன் என்பவன், தன் தமையனுக்கு மணம் பேசப்பெற்ற சோழன் மகளை, தானே மணஞ் செய்து கொள்ளக் கருதிக் காஞ்சிநகரத்தைஅடைந்து, சோழனிடம் பொய்மொழிகள் பல பேசி மணம்புரிந்து கொண்டான்.

இராஜசிம்மனுக்குப் பெண் கொடுத்தபின்னர், பாண்டிய நாட்டு அரசுரிமை அவனுக்குக் கிடைக்க வேண்டுமென்று சோழன் விரும்பி, இராஜேந்திரன் மீது போர்தொடுக்க எண்ணினான். எண்ணில்லாத சேனைகளோடு மதுரைக்குப் புறத்தே வந்து தங்கிப் பாடிவீடு அமைத்துக்கொண்டு போர்முரசு அறைவித்தான்.

விரும்பி வேண்டி நட்புப் பூண்ட சோழன் எதிர்பாராத வகையில் பகைவனாகிப் போர் முரசறைவதைக் கண்ட இராஜேந்திரன் சொக்கேசப் பெருமானது கோவிலை அடைந்து அவரது திருவடிகளை வணங்கி, பெருமானே! உம்மிடத்துப் பேரன்பு வைத்து இடையறாது வழிபாடாற்றி வந்த காடுவெட்டிய சோழன் அடியேனுக்குப் பல வரிசைகள் அனுப்பி நட்புக் கொண்டு ஒழுகி, இப்போது எந்தக் காரணமுமில்லாது என் மேல் பகைமை பூண்டு, படையெடுத்து வந்துள்ளான். அறங்

தடுமாறிய அசுரர்களின் முப்புரங்களையும் அழலிடைப் படுத்திய ஆண்டவனுகியநீர், அவனுடைய மறச்செயலுக்கு வெற்றியளிக்கமாட்டீர் என்பது உறுதி. அறம்திறம்பாது உமது திருவடிகளையே துணை என வாழும் அடியேனுக்கு இப்போரில் வெற்றி கிடைக்கும் வண்ணம் அருள் செய்வீராக என்று வேண்டினன்.

அப்போது சொக்கேசப்பெருமான் திருவருளால், அன்பனே! நீ உன் சேனையோடு போர்க்களத்திற்குச் சென்று பகைவனை எதிர்த்துப் போரிடு. வெற்றி உனக்கே உண்டாகும் என்று ஆகாயத்தில் ஓர் அசரீரி கேட்டது. அவ்வானொலியைக்கேட்ட பாண்டியன், ஆனந்தக் கடலில் மூழ்கிப் பெருமானைப் பன்முறை வணங்கி, விடைபெற்றுக் கொண்டு தனது இருக்கையை அடைந்தான்.

முன்னெச்சரிக்கையோடு பெரும்படை திரட்டிப் போருக்கு வந்த சோழன்மீது சிறுபடையை உடைய பாண்டியன் பொருதான். இடியை ஒத்த குரலும் காற்றை ஒத்து விரைந்து செல்லும் நடையும் கனலை ஒத்த சினமும் போரில் எவ்வாற்றானும் பின் வாங்காத திறலும் உடையவராய் முறிந்த புருவமும் சிவந்த கண்ணும் பிடித்த வாளும் கடித்த எயிறும் மடித்த உதடும் சுருட்டிய நுதலும், துண்ணென உற்ற சொல்லும், பகைவரை எண்ணல் செல்லா இகழ்ச்சியும் பிறவும் அமைந்தவராகிய இருதிறத்துப் படைவீரரும் ஒருவரோடு ஒருவர் கைகலந்து போர் புரியத் தொடங்கினர். பாண்டியன் சேனை சிறியதேயாயினும் ஆண்டவன் திருவருளால் அது சோழன் சேனைக்குப் பெரியதாகப் புலப்பட்டது. விரைந்து செல்லும் தேரோசையும், சினந்து பிளிறும் களிற்றுமுழக்கமும், கனைத்துமோதும் குதிரையின் ஒலியும் வீரர்கள்தோள் தட்டும் ஓசையும், வில்தொடுக்கும் கலிப்பும் போர்ப்பறைமுழக்கத்தோடு ஒன்றுபட்டு வானத்தைப் பிளந்தன. சோழனது படைவீரர்கள் செலுத்தும் அம்புகளை மார்பிலிருந்துபிடுங்கி மீண்டும் அவைகளை வில்லிற் பூட்டிப் பாண்டியன் படைவீரர் பகைவர்மேல் எய்து கொல்லுவர்.

நூழிலாட்டு என்று பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றமுறையில் பாண்டியன் படைவீரர்கள்

சோழன் படைவீரர்களின்மேல் மழைபோலக் கணைகளைப் பொழிந்து மகிழ்ச்சியால் துள்ளிக்குதிப்பார்கள். படைவீரர்களின் தலைகள் தரையிலே உருண்டன. மலைபோலத் திரண்ட தோள்கள் சரிந்தன. துதிக்கை முறிந்த யானைகளின் குருதி வெள்ளத்திலே படைக்கலங்கள் புரண்டு ஓடின. போர்க்களமெங்கும் பூதங்களும், பேய்களும், கழுகுகளும் நெருங்கின.

பேருழிக் காலத்தில் பிரபஞ்சம் அனைத்தையும் அழிக்கின்ற பெருந்தீயைப்போலக் கதிரவன் கொதித்து நின்று எரித்தலால் எல்லா நீர்நிலைகளும் வறண்ட வேனிற்காலம் அது. "மனிதர் வெங்கோடை தீர்க்கும் வசந்த மென்காலும் வேறு, துனிதவிர் இளங்கால்வேண்டும் சோலையும் சோலை வேண்டும், புனித நீர்த் தடமும் வேறு புதுமலர் ஓடை வேண்டும், பனிதரு மதியும் வேறு பான்மதி வேண்டுங் காலம்" என்று பரஞ்சோதி முனிவர் வேனிற்காலவெப்பத்தை வேறு ஓர் இடத்தில் புலப்படுத்தியுள்ளார்.

தீயவரைச் சேர்ந்த நல்லவரும் தீயவரே ஆவார் என்னும் உண்மையை விளக்குவதுபோல, கதிரவனின்வெப்பம்படிந்தகாற்றும், நிலமும் முதலாயின அக்கதிரவனைப்போலவே பெருவெப்பத்தை மக்களுக்கு அளித்தன. போர் வீரர்கள் அனைவரும் யானை, குதிரை, தேர் முதலியவற்றின் சிறு நிழலில் தங்கி வெயில் வெப்பத்தை ஆற்றிக்கொள்ள முயன்றார்கள். நீர்வேட்கை உண்டாகி அவர்களைப் பெரிதும் துன்புறுத்தியது.

அந்தவேளையில் சொக்கேசப் பெருமான் பாண்டியன் படைநடுவில்இருக்கு, யஜுர்,சாமம்,அதர்வணம்ஆகிய நான்குவேதங்களும் நான்கு கால்களாகப் பொருந்திய தண்ணீர்ப்பந்தல்வைத்து அதன்கீழ் நீறணிந்த நெற்றியும், மலரணிந்த காதும், கிண்கிணி அணிந்தகாலும்உடையவராய்ப் புலித்தோல் உடுத்து, அகத்தேயுள்ள அருட்குறிப்பு புறத்துப் புன்முறுவலால் வெளிப்பட எழுந்தருளியிருந்து, சடையில் தரித்த கங்கைநீரை நிரப்பிய கெண்டி ஒன்றைத் தாங்கி, தண்ணீர் வார்த்து வீரர்களின் தாகத்தைத் தணித்தருளினார்.

உண்ணுதற்குரியநீரில் சேர்க்கத்தக்க வாசனைப் பொருள்கள் இவை, இவை என்பதை, ஆண்

(12ம் பக்கம்பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

கள்ள வுள்ளத்தோடு செய்யப் படுஞ் சேவை தன் லட்சியத்தை யிழக்கும். உலக வாழ்க்கைக்கு அவசியமான சாதனங்களை ஒருவர்க்கொருவர் செய்து கொடுப்பதே சமூக சேவையென்பாருமுளர். அதுவுஞ் சரி ஒருவர் சகாயமின்றி இன்னொருவர்வாழ முடியாதுதான். ஆனால் அச்சேவையை நாத்திகருஞ் செய்வர், ஆத்திகருஞ் செய்வர். நாத்திகருக்கோ உடம்பே உயிர். உடம்புக்கு வேறாயதோருயிர் தம்முடம்பிலிருப்பதாக அவர் கொள்ளார். ஆகலின் உடற் சுகமே அவர் சேவையின் குறிக்கோள். அச்சேவையால் மக்கள் பசிதீர உண்பர், ஆசைதீர உறங்குவர். உறங்கல் ஈண்டு இடக்கரடக்கல். பக்கள் மாக்களாவர். மக்களுக்குச் செய்யும் சேவையே கடவுளுக்குச் செய்யுஞ் சேவையாகுமென்பது நாத்திக வசனம். ஆத்திகர் ஈசுரர்சேவையைச் சிறிதுசிறிதாக மறந்து நாத்திகக் குழியில் வந்து விழவேண்டும்; அதற்காகவே அவ்வசனம் நாத்திகர் வாயிலிருந்து வெளியாயிற்று. நவீனர் அதை யெடுத்துக் கொண்டு விலாவொடியக் கூவுகின்றனர். 'மக்களுக்குச் செய்யும் தொண்டே கடவுளுக்குச் செய்யும் தொண்டு என்று உணர்ந்து நடக்கும் சீரியோர் அனைவரும் சமய வாழ்வில் வாழ்பவராவர்' (23.7-55 தமிழ்நாடு), 'நான் சேவையே நாரணன் பூஜையாகும்' (16–6-55 தமிழ்நாடு) என்றது காண்க. மக்கள் கடவுளா? ஆயின் மக்கட்சேவையுங் கடவுட் சேவைதான். ஆனால் மக்கள் கடவு ளல்லர். ஆகலின் மக்கட்சேவையுங் கடவுட் சேவையாகாது. மக்கட் சேவையென்ற அளவிற்கூறி மகிழ்பவரே கடவுளை எய்த்துப் பிழைப்பவர். மேலும் ஒன்றைப் பிறிதொன்றாகக்கொள்வது மதியீனம். சன சேவையும் அறம். ஈசுர சேவையும் அறம். ஆனால் சன சேவை பசுவறம். ஈசுரசேவை பதியறம், சனசேவை இருள் சேர் இருவினையுள் அடங்கி அச்சேவகரைப் பிறவிப் பெருங்கடலுள் விழ்த்தும். ஈசுர சேவை அத

னுள் அடங்காமல் அச்சேவகரை அக்கடலின் கரையிற் சேர்ப்பிக்கும். அவ்வேற்றுமை பெரிது.

பாரததேசமே பாரதமாதா, பாரததேவி. அவள் வயிற்றிற் பிறந்தவரே அத்தேச மக்கள். மாதாவை வந்தித்தல் மைந்தர்க்குக் கடன். அதனால் 'வந்தே மாதரமென்போம் எங்கள் மாநிலத் தாயை வணங்குதுமென்போம்' என்ற பாட்டு உண்டாயிற்று. அதுவே அம்மாதாவுக்குச் செய்யுஞ் சேவை. 'தமிழணங்கே---உன் திறம்---வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே' என்றது இன்னொரு பாட்டு. அதுவே அவ்வணங்குக்குச்செய்யுஞ் சேவை. உண்டு உறங்கிச் சுகமாய் வாழத் தமக்குட்செய்து கொள்வதாகிய சனசேவையே அச்சேவைகளென்றல் மாத்ருத் துரோகமும், அணங்குத்துரோகமுமாம். தேசமும் மொழியும் மக்களல்ல. ஆனுல் அவை பறிபோனல் அவரும் பறிபோவர். அவர் பறிபோனல் அவை பறிபோகா. அவருள் நாள்தோறும் எத்தனையோ பேர் செத்தொழிகின்றனர். அதனால் அவை இம்மியும் பறிபோகவில்லை. தமிழை 'அழிந்தொழிந்து சிதையாவுஞ் சீரிளமைத்திறம்' எனக்கூறி வியந்தார் ஒரு தமிழர். அது தேசத்துக்குமாம். ஈசுரன் தந்தை. உயிர்களனைத்தும் அவனுக்கு மைந்தர். மைந்தர் சனசேவைமூலம் உலகில் உல்லாச வாழ்வு வாழ்ந்துவிட்டால் தந்தையைச் சேவித்தவராய் விடுமோ? தந்தைக்குப் பிரத்தியேக சேவை செய்யுங் கடன் மைந்தர்க்குக் கிடையாதா? அக்கடனை விட்டவர் பித்ருத் துரோகிகளே யாவர்.

நாம் செய்யும்சேவை இருவகையது. ஒன்று நம்மைவிடப் பெரியோர்க்குச்செய்வது. அது உபசாரமெனப்படும்- ஈசுரனுக்கும் அவனடியாருக்கும் செய்யும் பூசை அது. இன்னொன்று நம்மோடொத்தவருக்கும், நம்மைவிடத் தாழ்ந்தவருக்குஞ் செய்வது. அது உபகாரமெனப்படும். நவீனர் கூறுஞ் சமூக சேவை அது. உபசாரமும் உபகாரமும் ஒன்ருகா. சைவமக்கள் தம் உடலுக்கு வேருயதோருயிர் தம்முடப்பிலுண்டென்பதை அங்கீகரிப்பவர்- உயிருக்கு உறுதி தருபவன் சிவனெருவனே. அவனை வணங்காமல் அவ்வுறுதி கூடாது. ஆகலின் அவருக்கு ஈசுரோபசாரமே, சைவசேவையே, சிவ பூசையே முக்கியம். [தொடரும்

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத பங்குனி-2

# முத்தமிழ்க்காப்பிய மொழி பெயர்ப்பு

இன்று நாகரீகரேன ம தி க் கப் பெறும் பி ற நாட்டவரனைவரும், மிகத் தாழ்ந்த நிலையினராகவாழ்ந்து வந்த பண்டை நாளில், எவ்வாற்ருனும் குறையின்றிஎல்லாவளமு முடையவராய் வாழ்ந்தவர், தமிழ் மக்கள் என்பதை வரலாற்று நூல்கள் தெள்ளத் தெளியப் புலப்படுத்துகின்றன.

நாகரீகமேன்பது உடலைப் பற்றியதுதானென்று நினைத்து, இன் று வரை ஒழுகிவரும் பி ற நா ட் டுப் பெரும்பாலோர்க்கு, அது உயிரையும் பற்றியது என்று அறிவிக்கப் பண்டைத் தமிழ்நூல்களிற் சில இன்றுவரை மறையாது நிலைத்திருப்பது நமது தவப்பயனேயாகும். வேறு எந்த மொழிக்குமில்லாது தமிழொன்றிற்கே த னி ச் சிறப்பாயமைந்துள்ள பல உயர்வுகளுள், இயலிசை நாடகமெனப் பிரிக்கப் பெற்ற பிரிவுநிலை, மு ன் ன ணித் தகுதியை உடையதாகும்.

பண்டைத் த மி ழ் நூ ல் களில் மறைந்தனபோக எஞ்சியுள்ளவற்றில், இ ய ல் நூ ல் க ளின் எண்ணிக்கை அளவிற்கு இசை நாடக நூல்களின்எண்ணிக்கைஇப்போது இல்லை. இயலும் இசையும் நாடகமுமாகியமுத்தமிழும் விரவியதோரு பெருநூலாகச்சிலப்பதிகாரமோன்றே

றுமக்குக்கிடைத்துள்ளது. இதிலுள்ள முத்தமிழ் வளத்தையும் கருதியே, இதனை நாடகக் காப்பியம் என்றும் உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுளென்றும் பெரியோர் வழங்கினர்.

நாடகங்களில் உண்மைவரலாற்றைஉணர்த்துவனவும், புதுவதாகப் புனையப்பெறுகின்ற கதைகளை அடிப்படையாகக் கொண்டனவுமென இருவகை உண்டு. அவற்றுள் வரலாற்று நாடகங்களால் நாட்டுமக்களின் ஒழுக்க வழக்க நாகரீகங்களும் கதை நாடகங்களால் நாடகஆசிரியர்களின்திறமையும் புலப்படும்.

சிலப்பதிகார நாடகக் காப்பியம் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழ் நாட்டில் வாழ்ந்திருந்த கோவலன்-கண்ணகியின் வரலாற்றைக் கூறுவது. தமிழகமென்று பாராட்டப் பெறுகின்ற சேர-சோழ-பாண்டிய நாடுகளில் அவ்வந்நாட்டு அரசர்களின் தொடர்புபெற்ற நிகழ்ச்சிகளை அறிவிப்பது. அரசியல் பிழைத்த மன்னனை அறமே கூற்றாக நின்று கொல்லுமென்பதும், கற்பியலில் வாழும் மங்கையர், அனைவராலும் போற்றப்பெறுவரென்பதும்முன்னை வினைப்பயனை நுகர்ந்தே தீர வேண்டுமென்பதுமாகிய உண்மைகள் சிலப்பதிகார வரலாற்றால் மக்கள் உணரத்தக்கனவாகும்.

இம் மூன்று உண்மைகளையும் தெளிவுபடப் புலப்படுத்து முகத்தால் ஆசிரியர் இளங்கோவடிகள், செந்தமிழ்நாட்டுச் சிறப்பியல்புகள் பலவற்றைச் சிலப்பதிகாரக் காப்பியத்தில் எடுத்துக் கூறியுள்ளார். ஐ. நா. கல்வி-விஞ்ஞானக் கலாசாரக் குழு, இந்திய மொழிகளைச் சேர்ந்த **13** இலக்கியங்களை ஆங்கிலம்-பிரஞ்சு மொழிகளில் மொழி பெயர்க்க முயற்சி எடுத்துக்கொண்டது.

அதன் பயனாகச் சிலப்பதிகாரம் பிரெஞ்சு மொழியில்மொழிபெயர்க்கப் பெற்றுள்ளதென்றும், அது சரியாக இருக்கிறதாஎன்று பார்வையிடப் பெற்று வருகிறதென்றும் இந்தியக் கல்வித்துறையின் மூலம் அறிகிறோம்.மொழிபெயர்ப்பு அச்சாகி வெளிவருவதற்கு முன், மூலநூலால் அறியத்தக்க அடிப்படை உண்மைகளை, அது சரியாக உணர்த்துகின்றதா என்பதை நன்றாகத் தெரிந்துகொண்டு அச்சிட வேண்டுவது மிக மிகஇன்றியமையாததாகும் எனவேண்டிக்கொள்கிறோம்.

---

## படித்தோம்!

நாலாயிர திவ்யப்ரபந்தம்:-பதிப்பாளர்: ஆர். சேசவய்யங்கார் பப்ளிஷர்: டி. பார்த்தசாரதிஅய்யங்கார் அட்வகேட் தேவகோட்டை. விலை ரூ 2-0-0 கிடைக்குமிடம்:பாலாஜி ஸிண்டிகேட் லிமிடெட், வீரபாண்டியபுரம் தேவகோட்டை.

திவ்யப்ரபந்தத்தின் முதலாயிரம், இப்பதிப்பாசிரியரின் நல்லுழைப்பினுல் ஏற்கனவேவெளிவந்துள்ளது. அதைத் தொடர்ந்து பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகியவை அடங்கிய இரண்டாம் பகுதியாக இதனை வெளியிட்டிருக்கிருர்கள், பதிப்பாசிரியரின் அருளிச்செயல் மான்மியம், நூற்பதிப்புக்கு உயிர்நாடியாய் அமைந்து பல தலைப்புகளில் உண்மைப் பொருள்களை உணர்த்திக்கொண்டிருக்கிறது, ஆழ்வார்களிடத்து ஆழ்ந்த பக்தியுடைய பதிப்பாசிரியரது தொண்டு, தமிழுலகத்திற்குப் பயன் தருவதாகும்.

---

## அனந்தசயனம் ஐயங்கார் தேர்வு

புதுடில்லி மார்ச் 8

திரு எம் அனந்தசயனம் அய்யங்கார் இன்று மக்கள்சபையின் அவைத்தலைவராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

---

## குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு

ஸ்ரீவைகுண்டம் மார்ச் 9

குமரகுருபர சுவாமிகள் நினைவு என்றும் எங்கும் நிலவ வேண்டுமென்னும் திருவுள்ளத்துடன் ஸ்ரீலஸ்ரீகாசிவாசி அருள்நந்தித் தம்பிரான்சுவாமிகள்ஸ்ரீவைகுண்டம் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியில் தேவாரப்பரிசு ஏற்படுத்தியுள்ளார்கள். அதன்படி இங்குநடந்த பள்ளி ஆண்டுவிழாவில் தேவார முதற் பரிசுத்தொகை ரூ 70ஐ திரு பி என் சாமி, இரண்டாவது பரிசுத்தொகை 50ஐ சி சங்கரன், மூன்ருவது பரிசுத்தொகை ரூ 50ஐ ஐ டி என் மரகதம் ஆகியோர்கள் பெற்றனர்: இதில் முதற் பரிசு பெற்றவர் அல்லது அவர்

பெற்றோர் காரியாத்திரைசெல்ல உதவித்தொகையாக ரூ 135 அளிக்கப்பெறும்என்பது குறிப்பிடத்தக்கது.

---

## காஞ்சிபுரம்

திருவேகம்பப் பெருமான் கொண்டருளும்பங்குனி உத்திரப்பெருவிழாவில்16-3-56முதல் 29-3-56வரை நாடோறும் ஆயிரக்கால்மண்டபத்தில் மாலை 5 மணிமுதல் மெய்கண்டார்கழகத்தின்சார்பில் நுண் மாணுழை புலப் பல்கலைப்புலவர் விரிவுரைகள் நிகழ்த்துவார்கள்.

## மாசிலாமணி தேசிகர் நினைவுப் பரிசளிப்பு

ஸ்ரீவைகுண்டம் மார்ச்சு 9 மாசிலாமணிதேசிகர்பெயரால் காசிவாசி சுவாமிகளால் நிறுவப்பெற்றுள்ள பரிசுத் தொகையாகிய ரூ 100ஐ குமாரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியரான திரு எஸ் என் ஆதிநாதஅய்யங்கார் இவ்வாண்டுபெற்றார். காசிவாசி சுவாமிகளே அப் பரிசை இவ்வாண்டு வழங்கினார்கள்.

## ரயில் கால அறிவிப்பு

| | தேவகோட்டை | காரைக்குடி | |
|---|---|---|---|
| நம | ரஸ் | வரு | புறப் |
| **மானாமதுரைக்கு.** | | | |
| 629 | 5-2 | | 4-55 |
| R C | 6-30 | 6-16 | 6-19 |
| 601 | 8-46 | 8-29 | 8-39 |
| R C | | 9-52 | |
| 657 | 15-7 | 14-40 | 15-0 |
| R C | | 16-48 | |
| 653 | 17-22 | | 17-15 |
| R C | 20-14 | 20-0 | 20-3 |
| 607 | 1-3 | 0-48 | 0-56 |
| **திருச்சிராப்பள்ளிக்கு** | | | |
| 785 | 3-57 | 4-55 | |
| R C | 6-40 | 6-47 | 7-2 |
| 630 | 9-21 | 9-48 | |
| R C | | | 10-15 |
| 658 | 12-5 | 12-15 | 12-25 |
| RC | | | 17-8 |
| 602 | 17-57 | 18-20 | 18-28 |
| RC | 20-24 | 20-31 | 20-46 |
| 608 | 0-35 | 0-51 | 1-1 |
| **மாயூரத்திற்கு** | | | |
| 645 | | 11-25 | --- |
| 625 | | 14-50 | --- |
| 639 | --- | 22-15 | --- |
| 636 | --- | --- | 4-20 |
| 640 | | --- | 10-55 |
| 626 | | | 15-30 |

( 5ம் பக்கத் தொடர்ச்சி )
டவன்வழங்கிய தண்ணீரில் சேர்த்த பொருள்களைச் சொல்லும்போது, பெரும்பெற்றப் புலியூர் நம்பி தெளிவு படுத்திச் சொல்லியுள்ளார். அவரது பாடல் "நாதவிழ் கழுநீர், ஏலம், சந்தனம், உசீரம், கோட்டம்- கேதகை, இலவங்கம், சண்பகம், அதிமதுரம், கேடில்-பாதிரி முதல் கற்பூரம் அளவிய பரிமளம் சேர்- சீதள அமுதை நல்கத் தெளிந்தது குடித்த சேனை" என்பதாகும்.

தண்ணீர் அருந்தித் தாகந் தணிந்த பாண்டியனது படை வீரர்கள் உடற் களைப்பு நீங்கி வலிய போரைச் செய்தார்கள். சோர்வடைந்திருந்த சோழன் படை கலங்கிக் கடல் உடைந்தாற்போலப் புறங் கொடுத்து ஓடியது. இராஜேந்திரன்வெற்றி மாலை சூடினான். படை வீரர்கள் சோழனையும் இராஜசிம்மனையும் பிடித்துவந்து பாண்டியன் முன்னே நிறுத்தினர்.

'கொடுவந்த வளவன் தன்னைக் கோப்பெரும் செழியர்கோமான், வடுவந்த தம்பியோடு மாடம் நீள்கூடல் மேய, கடுவந்த மிடற்றுன்முன்போய் விடுத்து எந்தை கருத்து யாதுஎன்ன, நடுவந்த நிலையான் கேட்ப நாயகன்' நீ அறநெறி பிழையாதவனாதலின் உன் கருத்துக் கிசைந்ததைச் செய்க என்று அருளிச் செய்தான். பாண்டியன் அது கேட்டுச் சோழனுக்குப்பலவரிசைகள் கொடுத்து அவனது நாட்டை ஆளும்படி அவனை அனுப்பி விட்டு, தன் தம்பியாகிய இராஜசிம்மனுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து அனைத்துயிர்களுக்கும் அன்னைபோலப் பலகாலம் நிலவுலகிலிருந்து வளங்கள் சிறக்க வாழ்ந்து வந்தான்.

அடியார்க்கெளியவராகிய ஆண்டவன் தம்மிடத்து மெய்யன்புகொண்டு ஒழுகும் நல்லோர் பொருட்டு, திருமாலும் அறியாத சேவடிகள் நிலந்தோய எழுந்தருளி வந்து, வேண்டுவதை ஈந்து பாதுகாப்பான் என்பதற்கும் அறநெறிக்கு ஆதாவு தந்து பிறநெறி மாற உதவுவது ஆண்டவன் இயல்பு என்பதற்கும் இவ்வரலாறு, ஓர் சிறந்த எடுத்துக்காட்டாய் அமைந்துள்ளது. இதுகாறும் எனது சிறு சொல்லுக்குச் செவி சாய்த்திருந்த உங்கள் அனைவருக்கும் எனது வந்தனத்தைத் தெரிவித்து, என்னை நன்னெறி ஒழுகச் செய்து நாளும் ஆட்கொள்ளுகின்ற ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

சுவாமிகள் அவர்கட்கும் ஸ்ரீலஸ்ரீ இளவரசு சுவாமிகளுக்கும் எனதுமனமொழிமெய்களாலான வணக்கத்தைச் செலுத்திக் கொண்டு இம்மட்டில் அமைகின்றேன். நலம் பெருகுக

---

## பிரேஞ்சு மொழியில் 'சிலப்பதிகாரம்'

புதுடில்லி மார்ச் 7

'தமிழ்மொழியின் தொன்மைச் சிறப்புமிக்க காப்பியமாக விளங்கும் 'சிலப்பதிகாரம்' பிரெஞ்சுமொழியில் தற்போது மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. பிரெஞ்சுமொழியில் ஆக்கப்பட்டுள்ள சிலப்பதிகாரம், அழகும் உணர்ச்சியும் குன்றாத முறையில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளதா எனப் பார்வை யிடப்பட்டு வருகிறது. இதன் அச்சுப்பிரதி விரைவிலேயே வெளியிடப் பெறும்'

இவ்வாறு இந்தியக் கல்வித் துறை அபேச்சரின் பாராளுமன்றச் செயலாளர் டாக்டர் எம் எம் தாஸ் இன்று மக்கள் சபையில்அறிவித்தார். அவர் மேலும் கூறியதாவது:

இந்திய மொழிகளிலுள்ள தொன்மையான இலக்கியங்களை ஆங்கிலம் பிரெஞ்சு ஆகிய இரு மொழிகளிலும், அல்லது ஏதேனும் ஒரு மொழியிலும் மொழி பெயர்ப்பதற்குச் செலவாகும் தொகையில் பெரும் பகுதியை ஐக்கியநாடுகள் கல்வி-விஞ்ஞான கலாசாரக் குழு ஏற்றுக்கொண்டுள்ளது. மொழித்துறையில் செயலாற்றப்படுகின்ற இச்சிறந்த பணிக்காக இந்தியா ஐ நா பேரவைக் கல்விக்குழு ஆகியவற்றின் கூட்டுமுயற்சியில் ஒரு நிதி ஏற்படுத்தப்பட்டுள்ளது. இந்த நிதிக்கு இந்திய அரசாங்கம் இது வரை 30,000 ரூபாய்கள் நன்கொடையாக அளித்திருக்கிறது. இந்த ஆண்டில் மேலும் 15000 ரூபாய்களை இந்திய அரசாங்கம் இந்த நிதிக்கு அளிக்க முடிவு செய்திருக்கிறது.

இந்திய மொழிகளைச் சேர்ந்த 13 இலக்கியங்கள் தற்போது மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. இருக்கு வேதத்தின் தத்துவ உண்மைகள் நிறைந்த சில பாடல்களும் மொழி பெயர்க்கப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது.

---

## காபிப் பொடிக் கலப்பு

பெங்களூர், பிப் 6-

காபிபொடியில் கலப்புஏற்படு வதைக் கண்டுபிடிக்க மத்திய உணவு ஆராய்ச்சி நிலையம் ஒரு புதிய வழியைக் கண்டுபிடித்திருக்கிறது.

பொதுவாகக் காபியில் புளிய விதைகளும், பேரீச்சப் பழவிதைகளும் கலக்கப்படுகின்றன.

இதை இந்திய காபிக்குழு அறிவித்து மேலும் கூறுவதாவது:-

வீட்டில் மிகச் சிறு அளவில் ஒரு தேக்கரண்டிகாபிப்பொடிக்குக்கூட இச் சோதனை செய்ய முடியும்.

காபிக் கசாயம் எடுத்தபிறகு, எஞ்சியுள்ள பொருள்மீது சில சொட்டு காஸ்டிக்சோடா விட வேண்டும். உண்மையான காபியாக இருந்தால் நிறம் மாருது கலவைக் காபியாக இருந்தால் ஒருவித இளஞ் சிவப்பு நிறம் கொடுக்கும்.

## சிதம்பரம் செட்டியாரின் உருவச்சிலை

சென்னை மார்ச் 5-

காலஞ்சென்ற எம் சி டி எம் சிதம்பரம்செட்டியாரின் சேவை பற்றி முதலமைச்சர் காமராசர் இன்று மாலை பாராட்டிப் பேசினர். ஜார்ஜ்டவுனில் உள்ள யுனைடெட் இந்தியா லைப் இன்சூரன்சுக் கட்டிடத்தில் திரு செட்டியாருடைய சிலையை அவர் திறந்துவைத்தார். திரு காமராசர் மேலும் பேசுகையில் திரு செட்டியார் இந்தியன் ஓவர்சிஸ் வங்கியை ஆரம்பித்தவர். அவருடைய இன்சூரன்சுக் கம்பெனி வெளிநாட்டிலும் புகழ்பெற்றது. அத்துடன் இவர் இரக்கமுள்ள உள்ளம்படைத்தவர் என்ருர்.

திரு துரைக்கண்ணு (பொது மானேசர்) வரவேற்ருர். பி இ பிர்யார்ஸ் நன்றிகூறினர். நகரப் பெருமக்கள் கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

## தூத்துக்குடி முத்துக்குளிப்பு

சென்னை மார்ச் 5

தூத்துக்குடியில் முத்துக் குளிக்கப்பட்டதில் மார்ச் 3ந் தேதியில் எடுக்கப்பட்ட மொத்தச்சிப்பிகள்54336 என்று ஒரு பத்திரிகைக்கான அறிவிப்பு கூறுகிறது. அரசாங்கப் பங்கு 1000 சிப்பிக்கு ரூ 37லிருந்து 45வரை விற்கப்பட்டது, முத்துக் குளித்தவர்கள் தங்கள் பங்கை ரூபாய்க்குப் பத்திலிருந்து25வரை விற்ருர்கள்.

சென்னைப் பதிவுஎண் 2099



## உங்களுக்குத் தெரியுமா?

பள்ளிக்கூட சுகாதாரசேர்வீசுகளுக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 1.26 கோடி ரூபாய் ஒதுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. அவற்றின் கீழ் மொத்தம் சுமார் 4.25 லட்சம் சிறுவர்கள் பயன்பெறுவார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. அந்த சேர்வீசில் வைத்தியப் பரீட்சை சிறுநோய்கொடிக்கான சிகிச்சை சுகாதாரக்கல்வி ஆகியவை இடம்பெறும்.

தற்போது இந்தியாவில் சிமிட்டி உற்பத்தி வருஷத்துக்கு 40 லட்சம் டன்னாக இருந்துவருவதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 100 லட்சம் டன்னாகப் பெருக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் புதிதாக மொத்தம் அறுபது பர்லங்கள் கட்ட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. முதல் திட்டத்தின்கீழ் இதுவரை மொத்தம் 26பெரிய பாலங்கள் கட்டிமுடிக்கப்பட்டுள்ளன. மேலும் 31பாலங்கள் கட்டப்பட்டு வருகின்றன.

இந்தியசர்க்கார் 1951ல்மொத்தம் 27,000 ரூபாய் பெறுமானமுள்ள கதர் துணிகள் வாங்கினர், 1955ல் சர்க்கார் வாங்கிய கதர் துணியின் மொத்த மதிப்பு 87லட்சம்

மொத்தம் 2153400 ரூபாய் செலவில்தொளைபோடுவதற்கான இருபது சாதனங்களை வாங்குவதற்காக இந்திய சர்க்கார் ரஷ்யாவுடன் ஒப்பந்தமொன்றில் கையெழுத்திட்டுள்ளனர். இந்தியாவில் நிலக்கரி இருக்குமிடங்களைக் கண்டுபிடிப்பதற்காக அவை பயன்படுத்தப்படும்.

இந்தியாவில் நூல் உற்பத்தி 1954ல், 156.10 கோடி பவுண்டாக இருந்துவந்தது 1955ல் 162.15 கோடி பவுண்டாக உயர்ந்துவிட்டது.

இந்தியாவில் வருஷத்துக்குச் சுமார் 800 கோடி ரூபாய் மதிப்புள்ள பாலும் பால் பொருள்களும் உற்பத்திசெய்யப்பட்டு வருவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.